KALKI 21.6.87 ரூ. 1.50

# கல்கி




## குட்டிச்சுவரான ஆரம்பக் கல்வி

வளரும் குழந்தைகளுக்கு சுவையான
துணையாக விளங்கும் பால் பிஸ்கட்






சத்துமிகுந்த, சுவையான பிஸ்கட்.

பிரிட்டானியா

LINTAS BIN MB 12 2416 TM

# கவர்ஸ்டோரி



- இன்றைய ஆரம்பக் கல்வி முறை சரிதானா? அதில் என்ன குறை?
- அன்றைய மதிய உணவுத் திட்டமும் இன்றைய சத்துணவுத் திட்டமும் சரிதானா?
- கல்வி முறையை எப்படி மாற்ற வேண்டும்?
- நவோதயா பள்ளிகள் வெற்றி பெறுமா?
- கல்வியைப் பாதிக்கும் அரசியல்!

— எல்லாவற்றையும் அலசுகிறார் சி. சுப்ரமணியம்

# "வெறும் கட்டடங்கள்

கல்கி: இன்றைய ஆரம்பக் கல்வியின் நிலை பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

சி. சுப்ரமணியம்: நம் நாடு சுதந்திரம் அடைந்த பிறகு, கணிசமான அளவுக்கு முன்னேறித்தான் இருக்கிறது. சுமார் ஐம்ப தாண்டுகளுக்கு முன்பு நான் பொள்ளாச்சியில் படித்தபோது, அங்கு ஒரேயொரு மிடில் ஸ்கூல்தான் இருந்தது. ஆனால் இப்போது அப்படி இல்லை. ஒரு மைல் சுற்றளவுக்குள் ஒரு பள்ளியாவது இருக்கிறது. ஆனால் அதில் இருக்கக் கூடிய பெரிய குறை என்னவென்றால், அரசியல் சாசனத்தில் நாம் நிர்ணயித்துக் கொண்ட கட்டாயக் கல்வி என்ற இலக்கை இன்னும் அடையாததுதான். அதாவது பதினான்கு வயது வரை எல்லோருக்கும் கட்டாயக் கல்வி தருவதைப் பதினைந்து ஆண்டுகளில் நிறைவேற்றியிருக்க வேண்டும். ஆனால், சுதந்திரம் அடைந்து நாற்பதாண்டு காலமாகியும் இது நடக்கவில்லை.

கல்கி: இதற்கு என்ன காரணம்?

சி.எஸ்: பெரும்பாலான குழந்தைகள் முதல் வகுப்பில் வந்து சேர்ந்தாலும் தொடர்ந்து படிக்கவில்லை. இதோடு அப்போது பெண் குழந்தைகளையும் படிக்க வைக்க வேண்டுமென்ற உணர்வும் மக்களிடம் குறைவாகத்தான் இருந்தது. அதனால் இலக்கை அடைய முடியவில்லை.

கல்கி: பள்ளியில் வந்து சேர்ந்த குழந்தைகள் ஏன் படிப்பைத் தொடரவில்லை?

சி.எஸ்: வறுமைதான் காரணம். பெரும்பாலான குழந்தைகளுக்குப் பிறப்பிலிருந்தே ஊட்டச்சத்துக்குறைவானதால், அவர்களின் உடல் வளர்ச்சியும் மூளை வளர்ச்சியும் குன்றியிருந்தது. அதனால் பள்ளிக்கு வந்தால் கூட அங்கே சொல்லித் தருவதைக் கிரகிக்கும் ஆற்றல் அவர்களுக்கு இல்லை. ஒன்றும் புரியாமல் வகுப்பில் வெறுமனே உட்கார்ந்து கொண்டிருப்பது சங்கடமானதால் பலரும் படிப்பைத் தொடரவில்லை.



கல்கி: காங்கிரஸ் காலத்திலேயே மதிய உணவுத் திட்டம் கொண்டு வரப்பட்டதே! அதன் பிறகும் இந்தக் குறை தீரவில்லையா?

சி.எஸ்: மதிய உணவு என்பது குழந்தைகள் பள்ளிக்கு வந்த பிறகுதானே! அது போதாது. சொல்லப் போனால், குழந்தை பிறப்பதற்கு முன்பேயே நாம் நடவடிக்கை எடுத்தாக வேண்டும். குழந்தையின் வளர்ச்சி என்பது தாயின் கருவிலேயே ஆரம்பமாகி விடுகிறது. அதிலும் கருவுற்றிருக்கிற கடைசி மூன்று மாதங்கள் மிகவும் முக்கியம். அப்போது தாய்க்குப் போதுமான சத்துணவு இல்லையென்றால், கருவில் வளரும் சிசுவின் மூளை வளர்ச்சியும் பாதிக்கப்படும். ஆக, குழந்தைகளுக்கான சத்துணவு என்பது தாயின் வயிற்றில் இருக்கும்போதே தொடங்கப்பட வேண்டும். குழந்தை பிறந்த பிறகு ஓராண்டு வரையாவது அதற்குப் போதுமான தாய்ப் பால் வேண்டும். தொடர்ந்து தாய்க்குச் சத்துணவு கிடைத்தால்தான் குழந்தைக்கும் தாய்ப்பால் கிடைக்கும். எனவே, ஆரோக்கியமான குழந்தை என்பது ஆரோக்கியமான தாயைப் பொறுத்தே இருக்கிறது. பிறந்த பிறகும் ஐந்து வயது வரை குழந்தைகளுக்குச் சத்துணவு தரப்பட வேண்டும். இந்த ஐந்தாண்டுகளில் ஏற்படுகிற வளர்ச்சிதான் எதிர்காலத்திற்கான அஸ்திவாரம் என்று இப்போது ஆராய்ச்சியிலேயே கண்டு பிடித்திருக்கிறார்கள். இது பாதிக்கப்பட்டுவிட்டால் பின்னால் சரி செய்யவே முடியாது.

கல்கி: அப்படியானால், குழந்தைகளுக்கான கல்வித் திட்டமும் தாய்—சேய் மருத்துவ நலத் திட்டமும் ஒன்றாக இணைந்து நிறைவேற்றப்பட வேண்டும் என்கிறீர்களா?

சி.எஸ்.: அதேதான்! இந்த நோக்கத்தில்தான் 1966—லேயே காங்கிரஸ் தேர்தல் பிரகடனத்தில் குழந்தைகளுக்கான சோஷலிஸத் திட்டத்தை நான் சேர்த்தேன். குழந்தையாக இருக்கும்போதே சமவாய்ப்புத் தரப்பட்டால்தான், பிற்பாடு பெரியவர்களான பிறகு சம வாய்ப்பு என்று சொல்வதற்கு அர்த்தமிருக்க முடியும். குழந்தை நிலையில் சம வாய்ப்புத் தரப்படாமல், பெரியவர்களான பிறகு சம வாய்ப்பு என்ற பெயரில்,

# மட்டுமே பள்ளிகள் இல்லை..."

பலமானவர்களையும், பலஹீனமானவர்களையும் ஒன்றாகக் கருதினால் எப்படிச் சரியாக இருக்கும்? அதனால்தான் வளர்ந்த நாடுகளில் — குறிப்பாகச் சோஷலிஸ நாடுகளில் குழந்தை வளர்ப்புக்கு முன்னுரிமை தருகிறார்கள். இந்த அடிப்படைத் திட்டத்தைச் செயல்படுத்தினாலொழிய குழந்தைகளைப் பள்ளிக்குக் கொண்டு சென்றாலும் படிப்பார்வம் இல்லாமல்தான் இருக்கும். இதற்குக் கீழ் ஜாதி, மேல் ஜாதி என்கிற காரணமெல்லாம் கிடையாது. வறுமைதான் காரணம்.

கல்கி: நீங்கள் சொல்லும் இந்தப் பிரச்னையை அரசியல் சாசனம் உருவாக்கப்பட்டபோது யாரும் யோசித்துப் பார்க்கவில்லையா?

சி.எஸ்.: அப்போது இதைப் பற்றியெல்லாம் அதிகம் தெரிந்திருக்கவில்லை. நான் கல்வி அமைச்சராக இருந்தபோது, குழந்தைகள் பள்ளிப் படிப்பைப் பாதியிலேயே விட்டு விட்டுப் போகிற நிலை ஏற்பட்டது. ஏன் இந்த நிலை என்று உடனே யோசிக்க ஆரம்பித்தோம். மதிய உணவு கொடுத்தால் இந்நிலை மாறிவிடும் என்று நினைத்தோம். வந்தார்கள்; சாப்பிட்டு விட்டுப் போய்விட்டார்கள். அப்போதும் அவர்களுக்குப் பாடத்தில் ஆர்வம் வரவில்லை. ஏனெனில், அந்த மதிய உணவால், ஐந்து வயதிற்கு முன்பே ஏற்பட்டுவிட்ட வளர்ச்சிக் குறைவைத் தீர்க்க முடியவில்லை. அப்போது ஏற்பட்ட பாதிப்பு என்பது வாழ்நாள் முழுவதும் ஈடு செய்ய முடியாத இழப்பு. அது கான்கிரீட் மாதிரி. 'செட்'டாகிவிட்டால் பிறகு ஒன்றுமே செய்ய முடியாது. இதைப் புரிந்து கொண்டோம்.

கல்கி: நீங்கள் சொல்லுகிற அடிப்படையில் பார்த்தால் நிலைமை மிகவும் பயங்கரமானதாகத் தெரிகிறது. இப்போது இளைஞர்களுக்காகவும் பெரியவர்களுக்காகவும் போடப்படுகிற திட்டங்களால் பயனிராது என்று ஆகிவிடுகிறதே?

சி.எஸ்.: குழந்தைகளுக்கான திட்டங்களை முதன்மைப் படுத்திச் செய்வதுதான் இந்தச் சிக்கல் தொடர்ந்து ஏற்படாமல் தடுக்கும் ஒரே வழி. இல்லையென்றால் மேலும் மேலும் நமது நாடு தற்குறிகள் நிறைந்த நாடாகத்தான் ஆகிவிடும்.

கல்கி: சரி, இந்தக் குறைகளுக்கான காரணம் கண்டுபிடிக்கப்பட்ட பிறகு, அவற்றைக் களைய அரசாங்கம் என்ன செய்திருக்கிறது? அதில் மாநிலத்திலும் மத்தியிலும் அமைச்சராக இருந்தவர் என்னும் முறையில் உங்களின் பங்கு என்ன?

சி.எஸ்.: இதையெல்லாம் மனத்தில்



* குருகுல ஆசிரியர்கள் நம்மிடம் இல்லை

கொண்டுதான் நாங்கள் ஆட்சியில் இருந்தபோது ஒருங்கிணைந்த குழந்தை மேம்பாட்டுத் திட்டம் (**Integrated Child Development Scheme — ICDS**) கொண்டு வந்தோம். இப்போதும் அது தேவைதான் என்பதை ஒப்புக் கொள்கிறார்கள். ஆனால் நடைமுறையில் என்ன ஆகிறது? தாய்க்கு என்று கொடுப்பது தாய்க்குப் போய்ச் சேராது; குழந்தைகளுக்குக் கொடுப்பது குழந்தைக்குப் போய்ச் சேராது. அதற்குப் பரவியிருக்கும் ஊழல்தான் காரணம்.

கல்கி: எப்படித்தான் இதை மாற்ற முடியும் என்கிறீர்கள்?

சி.எஸ்.: இதற்கு ஒரே வழிதான் இருக்கிறது. இந்தத் திட்டத்தை நிறைவேற்றும் பொறுப்பை அந்தந்தக் கிராமத்தில் உள்ள தாய்மார்களிடம் ஒப்படைக்க வேண்டும். அவர்களுக்குத்தான் உள்ளூர் நிலைமைகளும் இதைச் செயல்படுத்த வேண்டிய முறைகளும் சரியாகத் தெரியும். வெளி அதிகாரிகளைக் கொண்டு ஒருபோதும் செய்ய முடியாது. இன்னும் சொல்லப் போனால் வெளியிலிருந்து ஒரு பெண்ணை அதிகாரியாக நியமித்து அனுப்பினால் கூடச் சரியாக நடக்காது. உள்ளூர்ப் பெண்களே அவரவர் ஊரில் திட்டத்தை நிறைவேற்றுகிற மாதிரி ஏற்பாடு செய்தால்தான் நடக்கும்.

கல்கி: இதற்கு நிர்வாக அதிகாரங்களை



• சரஸ்வதி

நவோதயாவைக் கண்டு ஏன் மிரள வேண்டும்?''

— சரஸ்வதி வித்யாலயா தலைமை ஆசிரியை சரஸ்வதி

**கா**லம் படுவேகமாக மாறிக் கொண்டிருக்கிறது. அந்த வேகத்துக்கு ஈடு கொடுத்துக் கல்வி முறையிலும் மாற்றம் ஏற்பட வேண்டும் என்று நினைக்கிறார்கள். இதற்கு ஸயண்டிபிக் முறையில் பாடம் சொல்லித் தர வேண்டும். அதற்காக எல்லாப் பள்ளிக்கூடங்களையும் ஒரேயடியாகப் புதிய பாதையில் கொண்டு வந்து விட முடியுமா? சோதனை அடிப்படையில் மாவட்டத்திற்கு ஒன்றாகச் செய்து பார்க்கலாம் என்று ஆசைப்படுகிறார்கள்.

நம் நாட்டில் காரியர் கைடன்ஸ் என்கிற வழிகாட்டும் துறையில் யாருமே கவனம் செலுத்தவில்லை. ஒரு குழந்தையை ஆரம்பத்திலேயே கவனித்து இவன் இப்படித்தான் வருவான், இந்த வேலையில்தான் பிரகாசிப்பான் என்று கண்டறிந்து வழி காட்ட எந்த முயற்சியும் மேற்கொள்ளப் படவில்லை.

வெளிநாடுகளிலிருந்து வரும் ஆசிரியர்கள் நம்முடைய பள்ளிகளைப் பார்வையிடும்போது அவர்கள் சொல்கிறார்கள், ''நீங்கள் நிறைய தியரிடிகல் பாடங்களையே நடத்துகிறீர்கள்...'' என்று! இதை நாம் கவனித்தாக வேண்டும். விசிறி செய்வது எப்படி? என்று புத்தகத்தை வைத்துக் கொண்டு பாடம் நடத்துவதை விடச் செய்து காட்டுவதுதான் நல்ல கல்வி முறை. இதுமாதிரியான தொழில் பாடங்கள்தான் நவோதயாவில் வரப்போகின்

அரசே குவித்து வைத்துக் கொள்ளாமல் கிராம மட்டத்திற்குப் பரவலாக்கினால்தானே முடியும்?

சி.எஸ்.: ஆமாம், அதையேதான் நானும் திருப்பித் திருப்பிச் சொல்லுகிறேன். 'டீசென்ட்ரலைஸ்' செய்தால்தான் சரியாகும்.

கல்கி: நீங்கள் சொல்லுகிறபடி உள்ளூர்த் தாய்மார்களிடம் இதை ஒப்படைத்தாலும் அவர்களும் படிக்காத தலைமுறையைச் சேர்ந்தவர்களாயிருந்தால் என்ன செய்வது?

சி.எஸ்.: நல்லவேளையாக ஒவ்வொரு கிராமத்திலும் இப்போது படித்த பெண்கள் சிலராவது இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்களைப் பயன்படுத்திக் கொள்ளலாம். கிராம அளவில் இத்தகைய ஊட்டச் சத்துத் திட்டத்தை நிறைவேற்ற உள்ளூரில் கிடைக்கிற பொருள்களும் தொழில் நுட்ப அறிவுமே போதுமானவை. வெளிநாடுகளிலிருந்து எதையும் கொண்டு வர வேண்டிய தேவை இல்லை. ஆக, ஆட்களும் இருக்கிறார்கள். பொருள்களும் இருக்கின்றன. தேவையெல்லாம் நடவடிக்கை மட்டும்தான்.

கல்கி: இந்நிலையில், இப்போது தமிழக முதல்வரால் கொண்டு வரப்பட்டுள்ள சத்துணவுத் திட்டம் எந்த அளவுக்குப் பயனுள்ளதென்று நினைக்கிறீர்கள்? வெறும் வோட்டுப் பிடிக்கும் யுக்திதான் என்று நினைக்கிறீர்களா?

சி.எஸ்.: வோட்டுப் பிடிப்பதற்காகச் செய்தாலும் நல்லதைச் செய்தால் வரவேற்க வேண்டியதுதான். ஆனால், அரசு ஒதுக்குகிற நிதி எவ்வளவு தூரம் மக்களுக்குப் போய்ச் சேருகிறது என்பதைப் பார்க்க வேண்டும். தவிர, எந்தத் திட்டத்தையும் அரசாங்கம் அதிகாரிகளையும் ஊழியர்களையும் வெளியிலிருந்து நியமித்து நடத்தினால் சரியாக வராது. இந்தத் திட்டத்திலும் உள்ளூர் மக்களே நிர்வாகத்தை மேற்கொள்கிறமாதிரி இருக்க வேண்டும். அது இல்லாதவரை அவரவர் கட்சிக்காரர்கள் சம்பந்தப்பட்டதாகவே இருக்கும். அதனால் அரசியலில் இருக்கும் ஊழல் அதிலும் பிரதிபலிக்கும். இதையெல்லாம் தீர்க்கும் ஒரே வழி அதிகாரங்களைக் கிராம மட்டத்திற்குப் பரவலாக்குவதுதான். மத்திய அரசிடமிருந்து அதிக அதிகாரம் கேட்கும் மாநில அரசு, தம்மிடமுள்ள அதிகாரத்தைக் கிராம நிர்வாகங்களுக்குத் தரத் தயாராயில்லை.

கல்கி: கல்வியைப் பொறுத்தமட்டில் மாநில அரசிடமிருந்த அதிகாரம் கீழே வருவதற்குப் பதிலாக, மத்திய அரசிடமே போய்ச் சேருகிற விதத்தில், கல்வி பொதுப் பட்டியலுக்குப் போய்விட்டதே. அது சரிதானா?

சி.எஸ்.: கல்வி பொதுப் பட்டியலானதற்கு நான்தான் பொறுப்பு. அவசர நிலையின் போது, சட்டங்களைத் திருத்த முற்பட்டார்கள். அப்போது நான், என்னென்னவோ செய்ய எண்ணுகிறீர்கள்; கூடவே இதையும் செய்து விடுங்கள் என்றேன். காரணம், கல்வியை ஒவ்வொரு மாநிலமும் ஒவ்வொரு பக்கம் இழுத்துக் கொண்டு போய், நாட்டில் ஒருமைப்பாட்டை அடைய முடியாத நிலை வந்துவிடக் கூடாது; ஒரு பொதுநோக்கு வேண்டும் என்பதுதான். ஆனால் நடைமுறை

றனை.

கடுமையாக உடலுழைத்துச் செய்கிற வேலைகளுக்கு இளைஞர்களை நாம் தயாரிக்கவில்லை. அன்றைக்கு ராஜாஜி சொன்னபோது 'குலக் கல்வி' என்று எதிர்க்கப்பட்டது. இன்றைக்கு ஹிந்தி வருகிறது என்று எதிர்க்கிறார்கள். 'நவோதயா' என்பது எந்தக் கல்வி முறைக்கும் போட்டியானதோ, எந்த ஒரு சாராருக்கும் விரோதமானதோ இல்லை.

இன்றைக்கும் இங்கிலீஷ் கான்வென்டுகளுக்குப் பிள்ளைகளை விரும்பி அனுப்புகிறவர்கள்தானே நிறையப் பேர் இருக்கிறார்கள். அங்கே தமிழுக்கு என்ன இடம் இருக்கிறது? இங்கிலீஷ் கான்வென்டுகளால் தமிழ் அழிந்து விட்டது என்று யாராவது சொல்வார்களா? அதே மாதிரி நவோதயாவில் போய் ஹிந்தி ஆங்கிலம் படிப்பதால் தமிழ் போய் விடாது.

பொறுக்கியெடுத்த சில நூறு மாணவர்களை மட்டுமே நவோதயாவில் சேர்த்துக் கொள்ளப் போகிறார்கள். இது ஒரு குறையாகச் சொல்லப்படுகிறது. சோதனை முயற்சியாக ஒரு திட்டம் முளைவிடும்போது... எல்லாப் பிள்ளைகளையும் சேர்த்துக் குழப்பினால் பலனை ஆராய முடியாமலே போகும். அதனால்தான் இப்படிப் பொறுக்குமணிகளான மாணவர்களைச் சேர்த்து நவோதயாவில் பயிற்சி தர எண்ணுகிறார்கள்.

ஆனாலும் நவோதயா கல்வி முறை பற்றி ஆராய்ந்து திட்டமிடுகிற குழுவில், ஒரு பயங்கரமான குறையும் இருக்கிறது. ஆரம்பப் பள்ளி ஆசிரியர் ஒருவர் கூடக் கிடையாது. பத்தாவது பன்னிரண்டாவது வகுப்பு வரை பாடம் நடத்துவது பற்றி ஆராய்கிற குழுவில் பேராசிரியர்களும், ஐ. ஏ. எஸ். அதிகாரிகளும், பொறியியல் நிபுணர்களும், அரசியல்வாதிகளும் எதற்காக? முக்கியமாக அந்த ஃபீல்டில் இருப்பவர்கள்தானே ஆக்கபூர்வமான கருத்துக்களைச் சொல்ல முடியும்? இந்தக் குழுக்கள் மட்டுமில்லை, கல்வி சம்பந்தமான எந்தக் குழுவிலும் ஆரம்ப ஆசிரியர்களைச் சேர்த்துக் கொள்வதில்லை. இந்நிலை மாறி ஆரம்ப ஆசிரியர்களை என்றைக்கு மதித்து உரிய இடம் தருகிறார்களோ அன்றுதான் கல்விக்கும், நாட்டுக்கும் சிறப்புக் கிடைக்கும்.

சந்திப்பு : **வெஸ்பால், ப்ரியன்**

யில் டெல்லியில் போய் அதிகாரம் குவிகிற மாதிரி அது ஆகிவிட்டது. இது சரியல்ல. கிராம அளவிலான அதிகாரமே சரி.

*கல்கி :* நீங்கள் சொல்லுகிறபடியே செய்தாலும் கல்வித் திட்டத்தில் ஆசிரியர்களுக்கு ஒரு முக்கியப் பங்கு இருக்கிறதல்லவா?

*சி.எஸ். :* முதலில் வேலை ஏதும் கிடைக்காதவர்கள்தான் இந்த வேலைக்கு வருகிறார்கள் என்ற நிலை மாற்றப்பட வேண்டும். அதற்கு இன்றைய கல்வி அமைப்பு மாற வேண்டும். ஆசிரியர்கள் அரசு ஊழியர்களான பிறகு, அவர்களுடைய கடமைகளைச் சரியாகச் செய்கிறார்களா என்று கண்காணிக்கவும் திருத்தவும் அந்தந்த ஊரில் வழியில்லாமல் போய்விட்டது. பள்ளி நிர்வாக அதிகாரம் உள்ளூர் மக்களிடமே இருக்குமானால் ஆசிரியர்களைச் சரியாகக் கட்டுப்படுத்த முடியும். மேலும் ஊதிய விஷயத்தில் பள்ளிக்கூட ஆசிரியர்களுக்குக் குறைவான சம்பளமும் கல்லூரி ஆசிரியர்களுக்கு அதிகமான சம்பளமும் இருப்பது சரியல்ல. ஏற்கெனவே ஓரளவு கல்வி அறிவுள்ள வாலிபர்களுக்குக் கற்றுத் தருவதைவிட குழந்தைகளுக்குச் சொல்லித்தருவதுகஷ்டம். எனவே, பள்ளி ஆசிரியர்களின் சம்பளமும் உயர வேண்டும். அதற்கேற்ற பொறுப்பைச் செய்கிறார்களா என்ற கண்காணிப்பும் நடக்க வேண்டும். ஆனால் இன்றைய நிலையிலோ அரசாங்கமும், கட்சிகளும் ஆசிரியர்களைத் தங்கள் அரசியல் ஏஜெண்டுகளாகப் பயன்படுத்தும் சிக்கல் இருக்கிறது. இந்தச் சிக்கல் தீருவதற்கும் அதிகாரம் பரவலாவது ஒன்றுதான் வழி.

*கல்கி :* சரியான நிர்வாக முறை, சரியான ஆசிரியர்கள் இருந்தாலும் இப்போதிருக்கும் பாடத்திட்டம் சரியாகவே உள்ளதென்று நீங்கள் நினைக்கிறீர்களா?

*சி.எஸ். :* பாடத் திட்டத்தை மாற்றிக் கொண்டுதானே இருக்கிறார்கள். புதிய கல்வித் திட்டத்தில் பல மாற்றங்கள் சொல்லப்பட்டிருக்கிறது. அவற்றை நான் வரவேற்கிறேன். ஆனாலும் நடைமுறையில் என்ன ஆகிறதென்று பார்க்க வேண்டும்.

*கல்கி :* புதிய கல்வித் திட்டத்தில் நவோதயா பள்ளிகள் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறதே. அது பற்றி உங்கள் கருத்து என்ன?

*சி.எஸ். :* அது ஒரு குருகுல முறைக் கல்வி. குருகுல முறைப்படி கல்வி கற்பிக்கும் ஆசிரியர்கள் நம்மிடம் கிடையாது. பல இடங்களிலிருந்தும் வருகிற செய்திகளைப் பார்க்கும்போது, நவோதயாப் பள்ளிகளுக்கேற்ற ஆசிரியர்கள் கிடைக்கவில்லை என்றே தெரிகிறது. முதலில் அதற்கான ஆசிரியர்களைத் தயார் செய்ய வேண்டியிருக்கிறது. வெறும் கட்டடம் மட்டுமே பள்ளிக்கூடம் ஆகாது. ஒவ்வொரு நவோதயாப் பள்ளிக்கும் இரண்டு கோடி ரூபாய் செலவு என்று தெரிகிறது. இந்தப் பணத்தை ஒவ்வொரு கிராமத்திலும்உள்ளபள்ளிகளுக்குக்குறைந்தபட்ச வசதிகளைச் செய்வதற்கும் பள்ளி நிர்வாகத்தை உள்ளூர் மக்களிடம் ஒப்படைப்பதற்கும் செலவு செய்வதற்கே நான் முன்னுரிமை கொடுப்பேன். இப்படி எல்லாப் பள்ளிகளையும் தரமானதாக்கிவிட்டால், இன்றைக்கிருக்கும் ஒரு சில தனியார் பள்ளி

## “நவோதயா : தாய்மொழிக் கல்விக்குச் சாவுமணி!”

— பேராசிரியர் நன்னன்



புதிய கல்விக் கொள்கையின்படி, தமிழ்நாட்டிலும் நவோதயா பள்ளிகள் வர இருக்கின்றன. இந்தப் புதிய கல்விக் கொள்கையைவகுத்ததுயார்? இதனுடைய பிதாமகன் யார்? எத்தனை கல்வியாளர்கள் இந்தக் கொள்கைக் குழுவில் இடம் பெற்றார்கள்? புதிய கல்விக் கொள்கை அறிக்கையில் அரசு செயலாளர் கையொப்பம் இருக்கிறதே தவிர, யாரால் கொள்கை தயாரிக்கப்பட்டது என்ற விவரமே இல்லை!

மெக்காலே கல்வித் திட்டத்திற்குப் பின்பு, கல்வித் துறையில் அவ்வப்போது சிற்சில மாற்றங்கள் செய்யப்பட்டு வந்தனவே தவிர, ஒரு புதிய முயற்சி மேற்கொள்ளப்படவில்லை. ஒரு காலத்தில் காந்திய அடிப்படையில் ஆதாரக் கல்வி என்று அடித்துக் கொண்டார்கள். இப்போது அந்தத் திட்டம் இருக்கும் இடம் தெரியவில்லை. இந்நிலையில்தான் நவோதயா பள்ளிகள்!

அண்டை மாநிலங்களில் இவை வந்திருக்கின்றன. புதிய முன்மாதிரியான இந்தப் பள்ளிகளில் ஆசிரியர்கள் அதே பழைய ஆசிரியர்கள்தாம்! பாடப் புத்தகங்களிலாவது புதுமை இருக்கிறதா என்றால் அதுவும் இல்லை. முதலில் நவோதயாவில் சொல்லித் தரப் போகிற ஆசிரியர்களுக்குப் பயிற்சி தர வேண்டாமா? பரிசோதனையாக இந்தப் பள்ளிகள் வர இருக்கின்றன என்கிறார்கள். இந்தப் பரிசோதனையை ஏற்கெனவே இருக்கும் மத்திய அரசு பள்ளிகளில் (கேந்திரிய வித்யாலயா) செய்து பார்க்கக் கூடாதா? எதற்காகப் பல கோடி செலவழிக்க வேண்டும்? கேட்கிறேன்.

இந்தப் பள்ளிகளில், ஏழாவது வகுப்பிற்குப் பின்னர் இந்தி, ஆங்கிலம் ஆகிய இரண்டுமொழிகள்தானும். இந்தப்பள்ளிகள் அமையவிருக்கும் கிராமப்பகுதிகளில் தமிழ் படிக்கவே சிரமப்படுகிறார்கள். இதில் இந்தி படிக்க வேண்டும் என்றால் எப்படி? இந்திய அரசின் கல்விக் கொள்கைப்படி, தாய்மொழியில் கல்வி தர வேண்டுமென்று கொள்கை இருக்கிறது. இந்தப் பள்ளிகள் பரவலாக வருமானால் அந்தக் கொள்கையைக் குழி தோண்டிப் புதைக்க வேண்டியதுதான். தாய்மொழியை மறக்க வேண்டியதுதான்.

இவற்றோடு இந்தப் பள்ளிகளுக்கு இருபது சதவீத மாணவர்கள் இன்னொரு மாநிலத்திலிருந்து வருவார்களாம். அதே போல் தமிழ்நாட்டிலிருந்தும் இருபது சதவீத மாணவர்கள் மற்ற மாநிலங்களில் உள்ள நவோதயா பள்ளிகளுக்குச் செல்ல வேண்டுமல்லவா? அப்போது, இந்தத் தமிழ்நாட்டு மாணவர்கள் இந்தியைக் கட்டாயமாகப் படிக்க வேண்டிய நிலைக்கு ஆளாவார்கள். ஆனால் மற்ற மாநிலங்களிலிருந்து வரும் மாணவர்கள் தமிழ் கற்க வேண்டியதில்லை. இது சரியா? தேசிய ஒருமைப்பாடு எப்படி வளரும் இதில்? வெறுப்புத்தான் வளரும்!

சந்திப்பு : கௌசல்யா

கள் சிறந்த கல்வியை வசதி படைத்தவர்களுக்கு மட்டுமே தருகிறது என்னும் ஒரு நிலையை மாற்றி விடலாம்.

கல்கி: நவோதயா பள்ளிகளின் மூலம் ஹிந்தி திணிப்பதாக ஓர் எதிர்ப்பு இருக்கிறதே. இது பற்றி உங்கள் கருத்து என்ன?

சி.எஸ்.: மொழிப்பிரச்னையைப்பொறுத்த மட்டில் நான் மும்மொழிக் கொள்கையை ஆதரிக்கிறேன். அதே நேரத்தில் ஒரு குழந்தை மூன்று வெவ்வேறு மொழிகளை மூன்று விதமான வரிவடிவங்களில் படிப்பது சிரமம் தான் என்பதையும் ஒப்புக் கொள்கிறேன். இதற்குத் தீர்வு தாய்மொழி தவிர, வேறு எந்த மொழியைப் படிப்பதாக இருந்தாலும், அதை ரோமன் வரிவடிவம் (ஆங்கில எழுத்து வடிவம்) மூலமாகப் படிக்க ஏற்பாடு செய்வதுதான். அப்போது கற்பதும் சுலபமாகிவிடும்.

கல்கி: இப்போது, ஆரம்பப் பள்ளிகளில் சில வகுப்புகளில் தேர்வுகள் நடத்தப்படாமலே அடுத்த வகுப்புக்கு புரமோட் செய்கிறார்களே, இது சரிதானா?

சி.எஸ்.: ஆரம்பத்தில் மூன்று நான்கு ஆண்டுகளுக்குத் தேர்வு முறை அவசியமில்லாத ஒன்றுதான். சரி வரச் சொல்லிக் கொடுப்பதுதான் முக்கியம்; தேர்வு அல்ல.

கல்கி: இப்போதைய கல்வித் திட்டம் என்பது மனிதனை மனிதப் பண்புகளோடு இருக்க உதவி செய்கிறதா?



**மின்னும் மேனி**
**மெருகுக்கு ரெக்ஸோனா**




மின்னி மிளிரும் மேனி...எந்நாளும் உங்கள் பொன்னான கனவு...நிறைவேற வரமளிப்பது ரெக்ஸோனா.

சரளம், கருவா, கிராம்பு, ஹபுஷா (தேவதாரம்) ஆகிய நாலு வகை இயற்கைத் தைலங்களின் நற்கலவையான ரெக்ஸோனா...சருமப் பராமரிப்பிற்கு இயல்பான வழியாகும்.

# ரெக்ஸோனா

**உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைக்கிறது.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS:RX 90 2416 TM

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்

**காம்ப்ளான் ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றுடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

சாதாரணமாக 15 அல்லது 16 வயதிற்குள் குழந்தைகளின் வளர்ச்சி பெரும்பாலும் முழுமையடைந்து விடுகிறது.

அவர்களுடைய வளர்ச்சிக்கு நேரடியாக உதவுவது புரதம் என்ற சத்துதான். ஆகவே உங்கள் குழந்தைகளுக்கு தேவை காம்ப்ளான்—இப்போது. காம்ப்ளான் சிறந்த புரதம் கொண்டுள்ளது—பால் புரதம் (20%) அது 22 மூலதார சத்துணவுகளும் கொண்டதாகும்.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளில்.




23

மூலதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

பால் சேர்த்திடத் தேவையில்லை.



**காம்ப்ளான்® – திட்டமிட்ட பரிபூரண உணவு**

GX/20/203 TML

சி.எஸ்.: கல்வியின் அடிப்படையே நல்லொழுக்கத்தை ஏற்படுத்துவதுதான். பண்பாடுகளை வளர்ப்பதுதான். ஆனால், சில ஆசிரியர்களே குடித்து விட்டுப் பள்ளிக்கு வருவதாகக் கேள்விப்படுகிறேன். இப்படியிருந்தால் எப்படி ஒழுக்கம் வளரும்?

கல்கி: கடைகளைத்திறந்துவைத்துக்குடிக்க வழிகாட்டியதே அரசாங்கம்தானே?

சி.எஸ்.: அதற்காக? விடு திறந்திருக்கிறதே என்பதற்காகத் திருட வேண்டிய அவசியமில்லை. இன்றைக்கு ஒழுக்க அடிப்படையிலான கல்வி என்பது பற்றிப் பலரும் பேசுகிறார்கள். நான்கைந்து சுலோகங்களும் கொன்றை வேந்தனும் ஒப்பித்தால் மட்டுமே அது ஒழுக்கக் கல்வியாகிவிட முடியாது. எல்லா மதங்களையும் விட மேலானது மனிதப் பண்பு — **Humanism.** அது கற்றுத் தரப்பட வேண்டும்.

கல்கி: எல்லா மதங்களும் மனிதப் பண்புகளைத்தானே போதிக்கின்றன?

சி.எஸ்.: சுய நலமின்மை, பொது நலம் கருதுதல், மற்றவர்களிடம் அன்பு காட்டுதல் போன்றவற்றைப் பல்வேறு மதங்களும் எப்படி உணர்த்துகின்றன என்பதை அம்மதங்களில் உள்ள கதைகள் மூலம் எடுத்துச் சொல்ல வேண்டும். வாழ்க்கையில் கடைப்பிடிக்க குழந்தைகளை ஊக்குவிக்க வேண்டும். ஆசிரியர்கள் முன்னுதாரணமாக விளங்க வேண்டும். அப்போது மதங்களை விட மனிதப் பண்புகள் மேலானவை என்பதைக் குழந்தைகள் தாமே உணர்வார்கள்.

கல்கி: நீங்கள் திரும்பத் திரும்ப வலியுறுத்தும் அதிகாரத்தைப் பரவலாக்கும் திட்டம் நிறைவேற நீண்ட காலம் ஆகலாம். ஆனால் இன்றைய நிலையில் உள்ள சிக்கலை எப்படி எதிர் கொள்வது?

சி.எஸ்.: அரசியல்வாதிகளுக்கு மட்டும் விருப்பமும் விவேகமும் இருந்தால் நீண்ட காலமெல்லாம் ஆகாது. இரண்டே ஆண்டுகளில் நிறைவேற்ற முடியும். கல்வியாளர் வி.சி. குழந்தைசாமியின் முன்முயற்சியின் பேரில் நான், மற்றும் பல்வேறு கல்வியாளர்கள், பழைய துணைவேந்தர்கள் போன்றவர்களெல்லாம் சேர்ந்து இதற்கான திட்டத்தை உருவாக்கி அரசிடம் கொடுத்திருக்கிறோம். அதன்படி கல்வியை முதலில் அரசியலின் — கட்சி அரசியலின் பிடியிலிருந்து விடுவிக்க வேண்டும். அணுசக்தித்துறைமாதிரி, கல்வித் துறையும் சுயேட்சையான அமைப்பாக ஆக்கப்பட வேண்டும். தேசிய அளவில் நிர்வாகம் சம்பந்தப்பட்ட விஷயங்களைக் கவனிக்க மத்தியக் கல்வி போர்டு ஒன்றை ஏற்படுத்த வேண்டும். அதில் அமைச்சர், கல்விச் செயலாளர் தவிர மற்றவர்களெல்லாம் பள்ளிக் கூட நிர்வாகத்தில் அனுபவமுள்ளவர்களாக இருக்க வேண்டும். இந்த போர்டுநிர்வாக விஷயத்திற்கு மட்டும்தான். பாடத் திட்டத்தை முடிவு செய்ய, முழுக்க முழுக்கக் கல்வியாளர்களே அடங்கிய



* சொல்லிக் கொடுத்தாலும் ரசிக்கும் சக்தி வேண்டாமா?

தேசியக் கல்வி அகாடமி அமைக்க வேண்டும். இதேபோல, மாநில அளவிலும் ஒரு போர்டு, ஒரு அகாடமி, மாவட்ட அளவில் நிர்வாக அமைப்பு; கிராம அளவில் பஞ்சாயத்திடம் நிர்வாகத்தை ஒப்படைக்க வேண்டும். இதுவே நாங்கள் சொல்லியிருக்கும் முறை. இதை நாடு முழுக்க உடனடியாக நிறைவேற்றுவிட்டாலும் ஒருமாவட்டத்திற்கு ஒரு தாலூகாவிலாவது அமல் செய்து, உள்ளூர் மக்களிடமே பொறுப்பை ஒப்படைத்து, இரண்டாண்டுகளுக்குச் சோதனை செய்து பார்க்கலாம். இது சிறப்பாகச் செயல்படுவதை மற்ற ஊர்க்காரர்கள் பார்த்தால், பசுமைப் புரட்சி பரவின மாதிரி இதுவும் பரவிவிடும். இப்படி அமைதியான வழியில் நாமே மாற்றத்தை ஏற்படுத்தாவிட்டால் கடைசியில் புரட்சி ஏற்பட்டு மக்களே இதைக் கொண்டு வருவதில்தான் முடியும்.

கல்கி: கடைசியாக ஒரேயொரு சந்தேகம். நீங்கள் சொல்லுகிறபடியே செய்தாலும் இன்னமும் நமது கிராம அளவிலுள்ள ஜாதி வேறுபாடு மறையாமல் இருக்கும் நிலையில் உள்ளூர் நிர்வாகம் இந்த ஜாதி அடிப்படையில் கலகலத்து விடாதா?

சி.எஸ்.: இதைச் சமாளிக்க உள்ளூர் நிர்வாகத்தை நாம் நமது பெண்களிடம் ஒப்படைக்க வேண்டும். அவர்களால் ஜாதிகளை மீறி இதைச் சரியாகச் செயல்படுத்த முடியும்.

புகைப்படங்கள்: **மனோ: ஆனந்த்**

மேலட்டை

வண்ணப்படம்: **கே.வி. ஆனந்த்**

பூ விழுந்தாலும் சரி; தலை விழுந்தாலும் சரி; ரெண்டும் இல்லாம நெட்டுக்குத்தாக நின்னாலும் சரி; அப்படியே ஆகாசத்துக்குப் போனாலும் சரி! எதுவும் நீங்க சொல்றது சரி! சரியோ சரி!
நான் ஒண்ணும் இவரைப் பட்டினி போடறதாக இல்லை. நீங்க உணவு கொடுக்கறதாக இருந்தா, அதைப் பத்திப் பேசுவோம்!
அழிக்கப் பட்ட யாழ் மக்கள்
பீரங்கி பேர ஊழல்
ஸ்வீடன் அரசு ஆய்வு அறிக்கை



# கல்கி

1987 ஜூன் 21
மலர் 45 இதழ் 47
பிரபவ ஆனி 7



## தப்பிக்கும் திருடர்களைத் தட்டிக் கொடுப்பதா?

"லஞ்ச ஊழலா? அப்படியென்றால் என்ன? அது பச்சையாக இருக்குமா, நீலமாக இருக்குமா?" என்பது போல்தான் பேசினார் பிரதமர், போஃபோர்ஸ் விவகாரம் அம்பலமானபோது. "இந்தக் குற்றச்சாட்டுக்கள் எல்லாம் சுத்தப் பொய்" என்று அழுத்தம் திருத்தமாகச் சொன்னார்; "எங்கே இருக்கிறது லஞ்ச ஊழல்?" என்று தட்டிக் கேட்டார்; "இடைத் தரகர்களே கிடையாது — ஸ்வீடிஷ் பிரதமரே வாக்களித்திருக்கிறார்" என்று நம் தலையில் அடித்துச் சத்தியம் பண்ணினார். "ஆதாரம் காட்டுங்கள்" என்று சவால் விட்டார். "சாட்சியம் இருக்கிறதா?" என்று சீறினார். "இவையெல்லாம் வீண் புரளி" என்றும், "ஆட்சியின் ஸ்திரத்தன்மையைக் குலைக்கப் பார்க்கும் சதி" என்றும் காங்கிரஸ் தீர்மானம் போட்டபோது, உடனிருந்து ஆமோதித்தார்.

ஆனால், இன்று ஸ்வீடிஷ் அரசு நடத்திய விசாரணையின் முடிவு, அறிக்கையாக வெளியாகியுள்ளது. அதில், இந்திய இடைத் தரகர்கள் இருந்திருக்கிறார்கள் என்றும் அவர்களுக்கு 35 முதல் 50 கோடி ரூபாய் வரை தரப்பட்டிருக்கிறது என்றும் பணம் ஸ்விஸ் வங்கிகளில் கட்டப்பட்டிருக்கிறது என்றும் சந்தேகத்துக்கு இடமின்றிக் கூறப்பட்டிருக்கிறது.

இப்போதாவது ராஜீவ் சட்டுப்புட்டென்று நடவடிக்கை எடுக்கிறாரா? கிடையாது! "நாடாளுமன்ற விசாரணைக் குழு அமைப்போம்" என்கிறார். சொன்னதோடு சரி, குழு இன்னும் அமையவில்லை. அதை யார் அமைப்பது? மாநிலங்களவையா? மக்கள் அவையா? பிரதமரா, சபாநாயகரா? என்றெல்லாம் குட்டை குழப்பி, காலத்தைக் கடத்திக் கொண்டிருக்கிறார்களேயொழிய, உண்மைகளைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் துரிதமாக இறங்கவில்லை. இதற்கிடையில் போஃபோர்ஸ் நிறுவனத்தின் ஏஜெண்டாக இந்தியாவில் செயல்பட்டவர், குடும்பத்தோடு இந்நாட்டிலிருந்து கம்பி நீட்ட அனுமதித்து, அரசு யந்திரம் அதனைக் கண்டுகொள்ளாமல் இருக்கிறது!

இவர்கள் பஞ்சாங்கம் புரட்டி, நாள் பார்த்து, வேளை பார்த்து, எம்.பி.க்களின் ஜாதகம் பார்த்து நாடாளுமன்ற விசாரணைக் குழு அமைப்பதற்குள், போஃபோர்ஸ் விவகாரம் என்று ஒன்று இருந்ததே மக்களுக்கு மறந்துவிடும்! அந்த மறதியை உறுதியாக நம்பித்தானே அரசியல்வாதிகள் கொழிக்கிறார்கள்!

ஸ்வீடன் நாட்டு அரசுதான் நன்றாக ஆராய்ந்து பார்த்து, 'இடைத் தரகர்கள் இருந்திருக்கிறார்கள்; கமிஷனும் பெற்றிருக்கிறார்கள்' என்று சொல்லிவிட்டதே! அப்புறம் என்ன? உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டியதுதானே? யார் அந்த ஏஜெண்ட்? அவன் மூலம் யார் யாருக்கு எவ்வளவு லஞ்சம் கிடைத்தது? என்று மிரட்டிக் கேட்டு விசாரிக்க வேண்டியதுதானே? மேலும் ஒரு பாராளுமன்றக் குழு விசாரணை எதற்கு? லஞ்சத்தை மேலும் பரவலாக்கவா? அல்லது மேலும் அவகாசம் பெற நடத்தப்படும் கண்துடைப்பு நாடகமா? ஸ்வீடிஷ் அரசு தனது நாட்டில் துப்பறிய முடியாத எதை, இந்தப் பாராளுமன்றக் குழு அந்நாட்டில் துப்பறிய முடியும்? ஸ்வீடிஷ் அரசு விசாரித்து அறிய முடியாத எதை, நமது நாடாளுமன்றக் குழு அங்கு விசாரித்து உணர முடியும்?

நீர்மூழ்கிக் கப்பல் பேரத்தை மீண்டும் நினைவூட்டியிருக்கிறார் வி.பி. சிங். 'விசாரணைக் கமிஷன் அமையுமானால் அது இந்த விவகாரத்தையும் சேர்த்து ஆராயட்டும்' என்கிறார். இந்த பேரத்தில் முப்பது கோடி ரூபாய் கமிஷன் வழங்கப்பட்டிருப்பதாக மேற்கு ஜெர்மானிய அரசு அதிகார பூர்வமாகவே நமது அரசுக்குத் தகவல் கொடுத்திருக்கிறது.

ஆயினும் என்ன? உடல் முழுதும் எண்ணெய் தடவிக் கொண்டிருக்கும் திருடர்கள் வழுக்கிக் கொண்டு போகிறார்கள். தப்பிக்கப் பார்க்கும் அவர்களைத் தட்டிக் கொடுக்காத குறையாகப் பிரதமர் நடந்து கொள்கிறார். ஏன்? ஏன்?

தாமதங்கள், வதந்திகளுக்கே வலிமை சேர்க்கும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

தருமபுரி மாவட்டம் ரீ—விசிட்:

# அசுர வேகத்தில் சில; ஆமை வேகத்தில் சில!

சென்ற ஆண்டின் இதே மாதத்தில்தான் நாம் தருமபுரி மாவட்டத்தில் சுற்றுப் பயணம் செய்தோம். அப்போது அம் மாவட்டத்தில் நாம் கண்டறிந்த பல்வேறு பிரச்னைகளைப் பற்றிக் கடந்த 13.7.86, 20.7.86 ஆகிய இரண்டு கல்கி இதழ்களிலும் வெளியிட்டிருந்தோம். அப்படி எழுதப்பட்ட பிரச்னைகளில் ஒன்றுதான் சிங்காரப் பேட்டையில் வேரூன்றிப் போயிருந்த விபசாரத் தொழில். இப்போது அது எப்படியிருக்கிறது? இந்த ரீ—விசிட்டின்போது அங்கு நேரில் சென்று பார்த்தோம்; விசாரித்தோம்.



* ஒகேனக்கல் அருவி: பழைய நிலையேதான்.

''அதை ஏன் கேட்கறீங்க? 'அசிங்கப்பட்டுப் போன சிங்காரப் பேட்டை'ன்னு கல்கியில் கட்டுரை வெளியான அடுத்த நாளே, அந்த விபசாரிங்க குடிசைங்களையெல்லாம் போலீஸார் வந்து இடிச்சுத் தரைமட்டமாக்கிட்டாங்க. இப்போ நீங்களே பாருங்க. அந்தக் குடிசைங்க இருந்த இடமெல்லாம் எப்படி இருக்குன்னு! அதோட மட்டுமில்லீங்க... உடனடியா இந்த ஊர் ஸ்டேஷன்ல இருந்த போலீஸ்காரங்களையும் கம்ப்ளீட்டா மாத்திட்டாங்க. இப்போ சிங்காரப்பேட்டைல விபசாரம்கிற பேச்சே கிடையாது!'' என்று ஒருமித்த குரலில் சொன்னார்கள் ஊர்க்காரர்கள்.



* பிரபாவதி: வேலை கிடைத்துவிட்டது.

அவர்கள் சொன்னது, முழுக்க முழுக்க உண்மைதான் என்பது, அந்த வீதியைச் சுற்றிப் பார்த்தபோது புரிந்தது. அதோடு, முன்பு இடிந்து கிடந்த ஊர்ச் சாக்கடைக் கால்வாய்களெல்லாம் இப்போது நல்லபடியாகச் சிமெண்ட் போட்டுச் செப்பனிடப்பட்டிருந்தன. ஆயினும் அங்குள்ள தாய்—சேய் நல விடுதி மட்டும் நாம் சென்ற ஆண்டு பார்த்தபடியேதான் இப்போதும் மூடிக் கிடக்கிறது! ஊர் மக்கள் இரண்டு கோஷ்டிகளாகச் செயல்பட்டுக் கொண்டிருப்பதால், பஸ் ஸ்டாண்டுக்கானதோர் அருமையான இடமிருந்தும் இன்னமும் பஸ் ஸ்டாண்டு கட்டி முடிக்கப்படாமல்தான் இருக்கிறது.

அடுத்து கிருஷ்ணகிரி மருத்துவ மனையிலுள்ள அவசரச் சிகிச்சைப் பிரிவு. அதில் ஒரு வேடிக்கை! முன்பு நாம் சென்று பார்த்த போது, அது கட்டி முடிக்கப்பட்ட நிலையிலும் செயல்படாமல் பூட்டிக் கிடந்தது. ஆனால், அங்கு பதிக்கப்பட்டிருந்த கல்லிலோ, கடந்த 25.1.84 அன்றே அப்போதைய சுகாதார அமைச்சர் ஹண்டே அதைத் திறந்து வைத்து விட்டதாகப் பொறிக்கப்பட்டிருந்தது. இந்த முரண்பாட்டைத்தான் நாமும் சுட்டிக்காட்டியிருந்தோம்.

ஆனால், விஷயம் அதுவல்லவாம். 25.1.84 அன்று அமைச்சர் ஹண்டேவால் கால்கோள் நாட்டப்பட்டது என்று பொறிப்பதற்குப்



* மாணிக்கம்: இவர் குறை தீரவில்லை.



* சிங்காரப்பேட்டை: இப்போது இக்கக் குடிசைகள் இடிக்கப்பட்டுவிட்டன.

பதிலாகத் தவறிப் போய், திறப்பு விழாச் செய்யப்பட்டதாகச் செதுக்கி விட்டார்களாம். அதனால்தான் இந்தக் குளறுபடியாம்! எப்படி, நம்ப முடிகிறதா?

எது எப்படியோ, இப்போது அந்த அவசரச் சிகிச்சைப் பிரிவு, நல்லபடியாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது என்பதுவரை நமக்கு சந்தோஷமே!

மற்றபடி கிருஷ்ணகிரியைப் பொறுத்தவரை, இப்போதும் எந்த பஸ்ஸும் பஸ் ஸ்டாண்டுக்குள் போய் நிற்பதில்லை. அங்கங்கேயுள்ள ரோட்டோரங்களில்தான் இன்னமும் நிற்கின்றன. புதிதாகச் செல்லும் பயணிகள், எந்த ஊர் பஸ் எந்தப் பக்கம் நிற்கும் என்று தெரியாமல், தலையைப் பிய்த்துக் கொண்டு அலைவதைத் தவிர வேறு வழியேயில்லை!



* கிருஷ்ணகிரி பஸ் ஸ்டாண்டு: இன்னமும் பஸ் வரவில்லை!

அடுத்தது ஹோசூர் பஸ் ஸ்டாண்டு. முன்பு பார்த்ததைவிடவும் இப்போது அதிகமான அளவுக்குக் குண்டும் குழியுமாகிவிட்டதோ என்ற நிலைதான். ஒரு முன்னேற்றமும் இல்லை. ஆயினும், முன்பு ஹோசூரிலிருந்த 'ஜெயந்தி என்டர்பிரைஸஸ்' என்ற காஸ் விநியோகம் செய்யும் ஏஜென்ஸி ஒன்று, தமது அரசியல் செல்வாக்கைப் பயன்படுத்திக் கொண்டு, சட்ட விதிகளை மீறி, மக்கள் குடியிருக்கும் தமிழ்நாடு வீட்டு வசதி வாரியக் குடியிருப்புக்குள்ளேயே தமது காஸ் சிலிண்டர்களை அடுக்கி வைத்திருப்பதாகச் சுட்டிக்காட்டியிருந்தோமல்லவா, அதற்கு உடனடி நடவடிக்கை! செய்தி வெளி வந்தவுடனேயே அந்த ஏஜென்ஸியின் உரிமையை ரத்து செய்துவிட்டார்கள்.

முன்பு, பத்தாயிரம் பேரைப் பாதிக்கும் பிரச்னை என்ற தலைப்பில், அஞ்செட்டி அருகிலுள்ள கிராமங்களில், ஊதுவத்திக்கான மூங்கில் குச்சிகளைச் செதுக்கி வாழ்க்கையை ஓட்டிக் கொண்டு வரும் மக்களுக்கு வசதியாக, முன்பு ஆரம்பிக்கப்பட்டு மூடப்பட்ட கூட்டுறவுச் சங்கத்தை மறுபடியும் திறந்து செயல்படச் செய்ய வேண்டும் என்று ஒரு கவர் ஸ்டோரியே வெளியிட்டிருந்தோம். அது பற்றி நாம் அப்போதைய கலெக்டர் பாலகிருஷ்ணனிடம் சொன்னபோது, 'அவர்கள் பிரச்னை பற்றிய முழு விவரங்களும் எனக்குத் தெரியும். விரைவில் ஆவன செய்கிறேன்' என்று உறுதியளித்திருந்தார். அப்படியிருந்தும், "இன்னும் எதும் செய்யப்படவில்லை!' என்று வருத்தத்தோடு சொல்கிறார், முன்பு நம்மை அந்த இடங்களுக்கெல்லாம் அழைத்துச் சென்று காட்டிய சாம்ராஜ்.

சாம்ராஜைப் போலவே வருத்தப்படுபவர் மத்தூர் ஒன்றியத்தைச் சேர்ந்த கவுண்டனூர் ஊராட்சி மன்றத் தலைவர் எல். மாணிக்கம். "கல்கியில் வெளி வந்த பிறகு, எங்கள் அத்திப்பள்ளம் ஏரிக் கால்வாயைச் செப்பனிட ஆணை பிறப்பிக்கப்பட்டது. ஆனால் என்ன காரணத்தாலோ பாதி வேலையை மட்டும் செய்துவிட்டு மீதியை அப்படியே போட்டுவிட்டார்கள். அதேபோல், பக்கத்து ஊர்களிலெல்லாம் சத்துணவுக் கூடம் கட்ட அனுமதியளித்து நிதி ஒதுக்குகிறார்கள். ஆனால் எங்கள் ஊருக்கு மட்டும் செய்ய மாட்டேன் என்கிறார்கள். என்ன காரணமென்றே தெரியவில்லை...." என்கிறார் அவர்.

இதுபோன்றதோர் அவல நிலைதான் சுற்றுலா மையமான ஒகேனக்கல்லுக்கும். இன்னமும் அங்கு பஸ் ஸ்டாண்டு கட்டப்படுவதற்கான அறிகுறிகளைக் கூடக் காணவில்லை. பஸ்களெல்லாம் பழையபடியே



* தருமபுரி அரசு மருத்துவமனை: இன்றும் அதே நிலைதான்.



* ஜெகநாதன்: கத்தெடுக்கத் தயார்.



* அஞ்செட்டிப் பகுதி மக்கள்: இவர்களுக்கும் விடிவு இல்லை.

தான் தாறுமாறாக நின்று மக்களை அவதிப் படுத்துகின்றன. கைக்கெட்டியபடியே காவிரி என்ற நிலையிலும் அங்குள்ள கழிப் பறைகளில் தண்ணீர் வசதி இல்லாதது, பொறுப்புணர்ச்சியே சிறிதும் இல்லாத நிர் வாகத்திற்கு ஓர் எடுத்துக்காட்டு. தண்ணீர் வசதி இல்லாத இடங்களிலுள்ள பூங்காக்கள் வறண்டு கிடப்பதில் ஒரு நியாயம் இருக் கிறது. ஆனால் ஒகேனக்கல்லில் உள்ள பூங்கா கூடச் செம்மண் புழுதி புரளக் கிடப்பது என்ன நியாயம்? நமக்குப் புரியவேயில்லை.

இவற்றோடு, ஜாதி, மத பேதமின்றி அனைத்து மக்களும் இயற்கையோடு ஒன்றிக் குளிக்கும் நீர்வீழ்ச்சிக்கு எதிரில், அனைவர் கண்களிலும் படும்படியாக, 'இயேசு கிறிஸ்து வின் ரத்தம் சகல பாவங்களையும் நீக்கி நம் மைச் சுத்திகரிக்கும்' என்ற கிறிஸ்துவ மதப் பிரசார வாசகத்தை எழுத அனுமதித்திருப் பது நல்லதற்கே அல்ல. பொதுவானதோர் இடத்தில் இந்து மதம் உள்பட எந்த மதத் தின் பிரசார வாசகங்களையும் அனுமதிப்பது கூடாது. அப்படி அனுமதிப்பது வேண்டாத சச்சரவுகளுக்கே அடிகோலும் என்பதைச் சம்பந்தப்பட்டவர்கள் புரிந்து கொள்வது நல்லது.

**இ**னி தருமபுரி நகருக்கு வருவோம். 'நகராட்சிக்கு மனுச் செய்து பணம் கட்டிய மூன்றே நாட்களில் குடிநீர் இணைப்புப் பெறலாம்' என்று முன்பு, தருமபுரி நகராட்சி அலு வலகத்தின் முன்னால் பெரிதாக வைக்கப்பட்டிருந்த போர்டு இப் போது இல்லை. "ஏன் எடுத்து விட்டீர்கள்?" என்று நகராட்சி ஆணையர் தாமோதரனைக் கேட் டோம்.

"எல்லாம் கல்கியால்தான் சார். நகராட்சிக்குப் பணம் கட்டி விட்டால் மட்டும் மூன்று நாட்களில் குடிநீர் இணைப்புப் பெற்று விட முடியாது. கவனிக்க வேண்டியவர்களையும் கவனிக்க வேண்டுமென்று யாரோ சொன்ன தாக நீங்கள் பிரசுரிக்க, அனைவரும் அந்த போர்டை ஒருமாதிரியாகப் பார்க்க ஆரம் பித்துவிட்டார்கள். அதனால்தான் எடுத்து விட்டோம். ஆனால் இப்போதும் சொல் கிறோம்... குடிநீர் இணைப்புக் கேட்கும் விண்ணப்பங்களில் எந்தவிதமான குளறு படிகளும் இல்லாவிட்டால் மூன்றே நாட் களில் கொடுத்து விடுகிறோம். கல்கியில் நீங்கள் வெளியிட்ட பிறகு, என்னிடம் விசா ரித்த கலெக்டரிடமும் இதையேதான் நான் சொன்னேன்" என்றார் ஆணையாளர் தாமோதரன்.

அவர் சொல்வதுபோல, தருமபுரி நக ராட்சி எல்லைக்குள் லஞ்சத்தின் வாசனை கூட எட்டிப்பார்ப்பதில்லை என்பதைநம்மால் நம்ப முடியாவிட்டாலும், இந்த ஆண்டின் வறட்சியில் கூடத் தருமபுரிவாசிகளுக்குக் குடிநீர்ப் பஞ்சம் ஏற்படவில்லை என்பது சந்தோஷத்திற்குரிய விஷயமே!

அடுத்தது தருமபுரி அரசினர் மருத்துவ மனை. முன்பு நாம் பார்த்தது போலவே இப் போதும் காம்பவுண்டுச் சுவர் இல்லாமல் தான் இருக்கிறது. ஆடு, மாடுகள், எருமை கள் என்று எந்தப் பிராணியும் உள்ளே போய்வரலாம். மாவட்ட மருத்துவ அலுவலர்

* பாவெல்: அதிபுத்திசாலி.



* புது கலெக்டர்: தொடர்ந்து செய்கிறேன்!



பிரமநாயகத்தைச் சந்தித்துக் கேட்டபோது, ''நானும் எழுதிக் கொண்டுதான் இருக்கிறேன். நிதி ஒதுக்கீடு கிடைக்க மாட்டேன் என்கிறது. என்ன செய்வது? இருபத்தெட்டு ஏக்கர் நிலப்பரப்புள்ள இந்த மருத்துவ மனைக்குக் காம்பவுண்டுச் சுவர் எழுப்புவது அத்தனை சுலபமான காரியமில்லை. மெதுவாகத்தான் நடக்க முடியும். மற்றபடி இங்கே எந்தவிதமான வசதிக் குறைவுகளோ, சுகாதாரக் கேடுகளோ கிடையாது. நீங்களே வேண்டுமானாலும் ஒரு ரவுண்டு போய்ப் பார்த்து விட்டு வாருங்கள்!'' என்றார். அவர் சொன்னது உண்மையே.

அப்புறம், 'ஓர் இளம் பெண்ணின் கண்ணீர்க் கதை' என்று எழுதினோமே, அந்தப் பிரபாவதியைத் தேடினோம். அவர் குடும்பத்தோடு சேலத்திற்குக் குடி போய் விட்டதாகச் சொன்னார்கள். காரணம், அவருடைய தோல் வியாதி பற்றியும் குடும்பச் சூழ்நிலை பற்றியும், கல்கியில் வெளிவந்ததைப் படித்த, கிருஷ்ணகிரி தொகுதி எம்.பி. யான ராமமூர்த்தி (இ.காங்கிரஸ்) எப்படியும் அவருக்கு உதவ வேண்டுமென்று முயற்சி செய்திருக்கிறார். கடைசியில் நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேஷனின் சேலம் கிளை அலுவலகத்தில் ஒரு டைப்பிஸ்ட் வேலை வாங்கிக் கொடுத்துவிட்டார். சென்ற மாதம் தான் அந்த வேலையில் போய்ச் சேர்ந்திருக்கிறாராம் பிரபாவதி. சொன்னார்கள்.

அப்படியானால், கலெக்டர் ஏதும் செய்யவில்லையா? விசாரித்தோம். கல்கியில் கட்டுரை வெளியானவுடன், பிரபாவதி சொந்தமாகவே ஒரு டைப்ரைட்டிங் இன்ஸ்டிட்யூட் வைத்து நடத்துவதற்குக் கடன் வசதி செய்து தரத் தயாராய் இருந்தாராம் கலெக்டர். பிரபாவதிதான் அது தம்மால் இயலாது என்று சொல்லி மறுத்துவிட்டாராம். ஆக,

* ஹோசூர் பஸ் . .ண்டு: முன்னேற்றமே இல்லை.



கலெக்டருக்கும் நமது நன்றி. கிருஷ்ணகிரித் தொகுதி எம்.பி.யான ராமமூர்த்திக்கும் நமது நன்றி.

கடைசியாகத் தருமபுரி மாவட்டக் காவல் துறைக் கண்காணிப்பாளர் வே. ஜெகநாதனைச் சந்தித்து, 'சிங்காரப்பேட்டையில் எடுக்கப்பட்ட உடனடி நடவடிக்கைகளுக்காகக் கல்கியின் சார்பிலும் தருமபுரி மாவட்ட மக்களின் சார்பிலும் பாராட்டுக்களையும் நன்றியையும் தெரிவித்தோம்.

பிறகு, முன்பு நாம் எழுதிய 'ஆறு வயதுச் சிறுவனா நக்ஸலைட்?' என்ற கட்டுரை பற்றிக் குறிப்பிட்டு, ''பாவெல் என்ற அந்தச் சிறுவன் மேல், பிச்சை எடுத்தானென்று ஒரு கேஸ்; சட்டத்திற்கு முரணான முறையில் கூட்டம் கூட்டினான் என்று ஒரு கேஸ்; ஜனங்

களைத் தடுத்து நிறுத்தி, அச்சுறுத்திப் பணம் பறித்தான் என்று மேலும் இரண்டு கேஸ்கள்; ஆக, அவன் மேல் மொத்தம் நான்கு கேஸ்கள்; இவையெல்லாம் ஓர் ஆறு வயதுச் சிறுவன் செய்யக் கூடிய காரியங்களா?'' என்று கேட்டோம்.

''இப்போது நக்ஸலைட்டுகள் தங்களுடைய சட்ட விரோதச் செய்கைகளுக்குப் பெண்களையும், குழந்தைகளையும் ஒரு கேடயமாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். அப்படிப் பயன்படுத்தப் பட்டு வருபவன் தான் அந்தச் சிறுவன் பாவெல். அவன் அதிபுத்திசாலி. அந்தச் சிறுவனின் புத்தி சாலித்தனம் எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. அப்படிப்பட்டதோர் சிறுவனுக்கு நமது தேசிய கீதம் கூடச் சொல்லித் தரப் படாமல், வெறும் நக்ஸலைட் கோஷங்களே போதிக்கப்பட்டு, அவன் எதிர்காலம்பாழடிக் கப்படுகிறதே என்பதுதான் எனது கவலை. உண்மையில் சொல்கிறேன். இப்போதுகூட அவன் பெற்றோர் அவனை எனக்குத் தத்துக் கொடுக்கச் சம்மதித்தால், நான் எனது தனிப்பட்ட முறையில் அவனைத் தத்தெடுத்து வளர்த்து, எவ்வளவு படிக்க விரும்புகிறானோ அவ்வளவும் படிக்க வைத்து அவனுக்கொரு நல்ல எதிர்காலத்தை அமைத்துத் தரத் தயாராய் இருக்கிறேன். இது வெறும் வார்த்தைகளல்ல. நிஜமாகச் சொல்கிறேன். இந்நிலையிலா அவன் மேல் பொய்க் கேஸ் போடுவோம்? அவன் புத்திசாலிச் சிறுவன் என்பதால், பெரியவர்கள் சொல்கிறபடி செய்கிறான். அப்படி அவ்ன் செய்தவற்றுக்குத்தான் கேஸ் போட்டிருக்கிறோமே தவிர, பொய்க் கேஸ்கள் ஏதும் போடவில்லை!'' என்றார் ஜெகநாதன்.

ஆக, ஓர் அதிபுத்திசாலித்தனமான சிறுவன், கடைசியில் நக்ஸல்பாரிகளுக்கும் காக்கிச் சட்டைகளுக்கும் இடையில் சிக்குண்டு, நசுங்கி, நைந்து போய்விடுவானோ என்பதுதான் நமது கவலையெல்லாம்.

இறுதியாக, நாம் தருமபுரி மாவட்டத்தில் ரீ—விசிட் செய்துபார்த்தபோது, சிலபிரச்னைகளுக்கு அசுர வேகத்தில் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருந்ததைப் பார்த்தோம் என்றாலும் சில விஷயங்களுக்கு ஆமை வேகத்தில் கூட நடவடிக்கை எடுக்கப்படவில்லை என்பதையும் பார்த்தோம். ஆமை வேகத்திற்கு என்ன காரணம் என்பதைக் கலெக்டரிடம் கேட்கலாம் என்று பார்த்தால், முன்பு நமக்குப் பேட்டியளித்த கலெக்டர் பாலகிருஷ்ணன் நமது ரீ—விசிட்டின்போது மாற்றல் செய்யப்பட்டிருந்தார். புதிய கலெக்டராகப் பொறுப்பேற்றிருக்கும் மோகன் வர்கீஸ் சுன்கத், பொறுப்பேற்று நான்கு நாட்கள் கூட ஆகவில்லை. இந்நிலையில் அவரிடம் எப்படிக் கேள்விகள் கேட்க முடியும்? இருந்தாலும், நாம் குறிப்பிட்டிருந்த பிரச்னைகளுக்குத் தொடர்ந்து நடவடிக்கை எடுக்குமாறு கேட்டுக் கொண்டிருக்கிறோம். அவரும் ''எடுக்கிறேன்'' என்று சொல்லியிருக்கிறார், பார்ப்போம்.

— இளங்கோவன்

பாவெல் படம்: சைதை மணி
நன்றி: 'அசைட்'

## அடுத்த இதழில்...



## நெ. 2 யார்? நெடுஞ்செழியனா, பண்ருட்டியா?

—கவர்ஸ்டோரி



## கன்னியாகுமரி, அண்ணா மாவட்டங்கள் ரீ-விசிட்!

# நிழல் யுத்தம்

## பாலகுமாரன்

## 11

உலகில் எதைஎதையோ கண்டுபிடித்துவிட்டார்கள். கடலின் ஆழமும் வானத்தின் விளிம்பும் கைக்குக் கிடைத்துவிட்டன. அணுவைப் பிளப்பதும், அண்டத்தை அளப்பதும் நிகழத் துவங்கிவிட்டன. ஆனால் இந்தப் பெண் என்னும் பிராணியை எது இயக்குகிறது என்று ஆணுக்குத் தெரியவில்லை. பெண் புதிர். பிரமிப்பு. பயம்; ஆண் என்னும் பிராணி அறியாத விஷயம்.

பெண்ணைப் புரிந்து கொள்ள ஆற்றல் வேண்டும். அவகாசம் வேண்டும். அனுபவம் வேண்டும். எல்லாவற்றையும் விடப் புரிந்து கொள்ளும் ஆவல் வேண்டும். 'மாயப் பிசாசு' என்று மருண்டவரை மீறி, 'நொந்து கெடுவாய்' என்று சிந்தித்தவனைப் புறக்கணித்து, நீயும் நானும் ஒன்று என்று யோசிக்கும் ஆணுக்குப் புத்தி வலிமை வேண்டும். எங்கு மோதினோம், எப்போது பிரிந்தோம் என்று வரலாறு ஆராய வேண்டும். பார்க்கும்போது தோன்றும் பிரமிப்பைப் புறக்கணித்துவிட்டு, நகரும்போது கிடைக்கும் போதையை மறந்துவிட்டு, 'நீ யார்?' என்று தனக்குள்ளேயே கேட்க வேண்டும்.

கேட்டிருக்கிறார்கள்; காலம் காலமாய்க் கேள்வி கேட்டிருக்கிறார்கள்; நுண்ணறிவும், மெல்லிய உணர்வும் கொண்ட ஆண்கள் கேட்டிருக்கிறார்கள்.

'யாயும் யாயும் யாராகியரோ
எந்தையும் நுந்தையும்
எம்முறைக் கேளிர்.'

எப்படி எனக்கு நீ உறவானாய் — உறவென்று ஆன பிறகு எப்படி எனக்குள் தடமானாய் — எது நம்மைப் பிரியவொட்டாமல் செய்த சக்தி என்று வியந்து நின்றிருக்கிறார்கள். விடை கண்டதில்லை.

கல்பகோடி காலமாய் ஓர் உறவு விநோதமாய், விடையறியாமல், வளர்ந்து வந்திருக்கிறது; வளர்ந்து வருகிறது. டெஸ்ட் ட்யூப் பேபியோ, கம்ப்யூட்டர் மாயப் பிம்பமோ இனி மனைவி வேண்டாம், பெண் என்னும் தோழமை வேண்டாம் என்று சொல்லிவிடுமா? தெரியவில்லை.

உழைக்க உடம்பில் வலுவிருக்கிறது; புத்தியிருக்கிறது; செய்யத் தொழில் இருக்கிறது; தொழிலில் மரியாதை இருக்கிறது; வருமானம் வருகிறது. இனி இளைப்பாற இடம் வேண்டும்; துணை வேண்டும்.

அந்தத் துணையின் பெயர் மனைவி.

வேலையும் சுகமும் வசதியும் அசையாப் பொருளாய், ஜடமான விஷயங்கள். இந்தத் துணை உயிருள்ள விஷயம். இன்னொரு உயிர் என்கிற விஷயம். இதுதான் உயர்வு; இதுதான் சிக்கல். பெண்ணைப் பொருள், போகம் என்று நினைத்தவனுக்குச் சிரமமுமில்லை; சந்தோஷமும் இல்லை. செம்புலப் பெயல் நீர் போல அன்புடை நெஞ்சம் தாங் கலந்தனவே என்று உருகுகிறவனுக்குத்தான் சந்தோஷம்; சிரமம்.

முரளி இந்தச் சந்தோஷ வேதனையில் புரண்டு கொண்டிருந்தான். கைகளை அவனிடம் கொடுத்துவிட்டுக் கண்கொட்டாமல் அவனையே பார்த்துக் கொண்டிருந்த லலிதாவையே நினைத்துக் கொண்டிருந்தான். அப்பா! என்ன அழகு....! வியந்து கொண்டிருந்தான்.

ராஜா மெச்சினதே ரம்பா. உலகத்தில் எந்தப் பெண் அழகில்லை! எவள் காவியமில்லை! பார்ப்பவரின் கண்ணோட்டம். மனசு, பிரியம் உறவு என்பதையறியும்போது அழகு அமைகிறது. அழகு ஒரு தொடர்புச் சொல்.

ஓர் அனுபவம் கொடுத்த முதிர்ச்சி, முரளியைத் தூங்கவொட்டாமல் புரட்டி எடுத்தது.



அவள் உருவே கண்முன் நிற்கிறது. அவளைப் பற்றியே நினைவு போகிறது. அவள் குரலே மனசுக்குள் ஓடிற்று. உள்ளும்புறமும் அவள் ஆக்கிரமிப்புக்கு ஆட்பட வைத்தது. இந்த ஆக்கிரமிப்பு பிடித்திருந்தது.

''ஹலோ....! நான் லலிதா பேசறேன்.''

ஒரு பிற்பகல் குரல் கேட்டபோது நம்ப முடியவில்லை.

லலிதா எந்த லலிதா?

நடந்தவற்றையே நினைவு அசை போட்டு, அசை போட்டு ரசித்துக் கொண்டிருக்கிற போது நிகழ்காலம் புரியவில்லை. நிஜமாய்ப் போனில் குரல் கேட்டபோது சந்தோஷம் தாளவில்லை.

''எத்தனை லலிதாவை உங்களுக்குத் தெரியும்?''

''ஸாரி! நீங்களா? நான் முரளி பேச றேன்.''

''சொல்லாமலே தெரியறது. இவ்வளவு தடுமாறுதே பேச்சு, அதுலயே புரியறது!''

'என்ன புரிந்து கொண்டாய்? குழம்பிய வன் என்று? தத்தி என்று? என் பலவீனத்தை யா? புறங்காலெட்டித்தனத்தையா?' இதற்கு என்ன பதில் சொல்வது?

''ஹலோ, என்ன பேச்சையே காணோம்?''

''சொல்லுங்கோ, லலிதா....''

''என்ன இது. வாங்கோ போங்கோன்னு!''

''அடுத்த சீட்ல இன்னொரு ஆபீஸர் இருக் காரே.

''அடேயப்பா, பக்கத்துல ஆள் இருந்தா மரியாதையாப் பேசணும். இல்லேன்னா வாடி போடியா?''

''அப்படியில்லே.''

''வேறே எப்படி?''

என்ன பதில் சொல்வது....?

''ஹலோ! என்ன பேச்சையே காணோம்?''

''சொல்லுங்க லலிதா.''

''ப்யானோ கான்ஸர்ட். இன்னிக்கி மியூசி யம் தியேட்டர்ல. வரேளா....?''

''உங்களுதா?''

''இல்லே, ஒரு அமெரிக்கன். உங்களுக்கு இது பற்றித் தெரிஞ்சுக்கணும்னு ஒரு நாள் சொன்னேளே. அது ஞாபகப்பட்டது. கூப் பிட்டேன்.''

''அப்பாகிட்ட....''

''சொல்லிட்டேன்.''

''எத்தனை மணிக்கு?''

''ஏழு மணி.''

''நான் எங்க வரணும்?''

''வீட்டுக்கு வாங்களேன்.''

''வரேன்.''

''தாங்க்யூ!''

போன் வைக்கப்பட்டு விட்டது. இவன் இரண்டு நம்பர்கள் சுழற்றி செக்யூரிட்டிக் குப் போன் செய்தான்.

''சங்கரன் சார்! இன்னிக்குச் சாயந் திரம்....''

யாது''. இங்கே நிஜம் சொன்னான். லலிதா சிரித்தாள்.

பியானோ கான்ஸர்ட் புரியவில்லை. சுத்தமாய் ஓர் ஓசை, ஒரு லயம் கூட அர்த்த மாகவில்லை. லலிதா அசையாது இருந்தாள். எழுந்து வணங்கிய பியானோ கலைஞனைப் பார்த்த பிறகுதான் இசை முடிந்தது என்பது முரளிக்குப் புரிந்தது.

முடிந்த பிறகு பார்ட்டி. கட்லெட். ஏதோ இனிப்பு. காப்பி. குசுகுசுவென்ற பேச்சு. சின்னச் சிரிப்பலைகள். சம்பந்தமில்லா நகர்வுகள். சகலமும் யதேச்சையாய் இருந் தன. நின்றபடியே சாப்பிட்டார்கள். காப்பி கொதித்தது. சாஸரில் ஊற்றிச் சாப்பிட லாமா என்று முயற்சி செய்தபோது, லலிதா கண்ணால் தடுத்துவிட்டாள்.

''கொஞ்சம் ஆறின பிறகு கப்புலேர்ந்து சாப்பிடுங்கோ'' என்று காதோரம் சொன் னாள். சரக்கென்று எதையோ தெரியாமல் மிதித்த அவமானம் உணர்ந்தான்.

சுற்றிப் பார்த்தான். யாரும் சாஸரில் ஊற்றிக் காப்பி உறிஞ்சவில்லை. பேசிக் கொண்டே மெல்ல மெல்ல உறிஞ்சினார்கள்.

லலிதாவோடு நிறையப் பேர் பேசினார் கள். பியானோ வாசித்தவரை நெருங்கி, முதுகு குனிந்து வணங்கி, கை பற்றி ஏதோ பாராட்டினாள். அந்த அமெரிக்க முதியவன் வாய்விட்டுச் சிரித்தான். அந்தப் பெரிய சிரிப்புச் சத்தம் எல்லோரையும் திருப்பிற்று. அந்த முதியவன் லலிதாவைக் கட்டித் தழுவிக் கொண்டான். காமிரா ஒன்று வெளிச்சம் துப்பிற்று. அமெரிக்கன் அணைப் பிலிருந்து லலிதா முரளியைக்கை காட்டி அழைத்தாள். அறிமுகப்படுத்தினாள். முரளி கை குலுக்கினான்.

மறுபடியும் கேமரா வெளிச்சம் துப்பிற்று. பார்ட்டி முடிந்து வெளியே வந்தார்கள். வெளியே இருட்டி விட்டிருந்தது. குப்பென்று குளுமையான காற்று தாக்கிற்று.

''அப்பா! வெளியே எவ்ளோவ் நல்லா யிருக்கு'' தன்னை மறந்து முரளி பேசினான்.

''உள்ளே நடந்த மியூசிக் ரசிக்கலையா?''

''மியூசிக்.... நல்லா இருந்தது.''

''பார்ட்டி பிடிக்கலையா?''

''இல்லையே அதுக்குச் சொல்லலை. ஓர் இடத்துல இத்தனை நேரம் அடைஞ்சு கிடந்துட்டு, வெளியே வந்ததும் ஜில்லுன்னு ஆகுமே அதைப் பாராட்டினேன்.''

''நான் ரொம்ப லக்கி முரளிதரன்.''

''என்ன லலிதா?''

''எவ்வளவு பெரிய ஜீனியஸ் தெரியுமா?''

''யாரு?''

''அடேங்கப்பா, என் கையை நானே முத்தம் கொடுத்துக்கலாம் போல இருக்கு முரளி. நான் நாற்பது, ஐம்பது கான்ஸர்ட் கேட்டிருப்பேன். இப்படி ஒரு மேடை அமைஞ்சதில்லை. ஐயோ, நான் ரொம்ப லக்கி முரளிதரன். எனக்கென்னவோ குதிச் சுண்டு ஓடணும் போல இருக்கு.''

உள்ளே கனத்தது.

''போயிட்டு வாப்பா. இப்பத்தான் லலிதா சொன்னா. போயிட்டு வா.'' போனை வைத்து விட்டார்.

அரைமணி முன்னதாய் வீட்டுக்குக் கிளம்பினான். ஆட்டோ பிடித்தான். குளித் தான்.

''என்ன முரளி? கோயிலுக்கா?'' அம்மா கேட்டாள்.

''இல்லம்மா. ப்ரெண்ட் வீட்டுக்கு.''

''சம்பந்தியாத்துக்கா?''

''இல்லம்மா, மியூசியம் தியேட்டர் கிட்ட.''

பொய் சொன்னான். அம்மாவுக்குப் புரி யாது. புரிந்தாலும் சம்மதிக்கத் தோன்றாது. வலியர் சம்மதம் பெற்றாலும் கவலை தோன்றா மல் இருக்காது. அந்தப் பயம் தொண தொணக்கும். கலிகாலம் என்று நெட்டுயிர்க் கும். எதற்கு வம்பு?

சீராய் உடுத்திக் கொண்டு சங்கரன் வீட்டு வாசலில் பெல் அழுத்தியதும் லலிதா கதவைத் திறந்தாள். நாலாவது நிமிடம் காப்பி கொடுத்தாள்.

''அம்மாகிட்டச் சொன்னேளா...'' என்று கேட்டாள். ஒரு நிமிடம் காப்பி தொண்டை யில் நின்றது. பேச முற்பட, புரையேறிப் போயிற்று. லலிதா தலையைத் தட்டினாள். மல்லிகை கிறங்க வைத்தது.

''இல்லை, சொல்லலை. அம்மாவுக்குப் புரி

## பொன்மொழிப் போட்டி — 12 முடிவு

***சரியான விடை:***

*ஜவாஹர்லால் நேரு:* ஆறு மணி நேரத் தூக்கம் அவசியம்; ஏழு மணி நேரத் தூக்கம் சுகபோகம்; எட்டு மணி நேரத்தூக்கம் கெட்ட பழக்கம்.

*லின்யூடாங்:* காரியங்களைச் செய்து முடிப்பது ஓர் அற்புதக் கலைதான். காரியங்களைச் செய்யாமலிருப்பதும் ஓர் அரிய கலையே! தேவையற்ற காரியங்களை ஒதுக்கி விடுவதே, வாழ்க்கையின் மேதைத் தன்மை.

*சத்யசாயிபாபா:* நாம் எதற்கு ஆசைப்படுகிறோமோ, அது நம்மிடம் இல்லையாதலால் அந்த அளவுக்கு ஏழையாக இருக்கிறோம். எவன் அதிக ஆசைப்படுகிறானோ, அவன் அதிக ஏழையாக இருக்கிறான்.

*தாமஸ் ஹார்டி:* மதத்தின் முக்கிய நோக்கம் மனிதனை தேவலோகத்துக்கு அழைத்துப் போவதல்ல; தேவலோகத்தை மனிதனுக்குள் புகுத்துவதே!

*பெர்னார்ட்ஷா:* உண்மையைக் கூறுவதை விடப் பெரிய நகைச்சுவை உலகில் வேறொன்றுமில்லை.

**சரியான விடையை எழுதிய கே.என். லலிதா, சென்னை — 23; டி.ஜி. ஸ்ரீசைலன், சென்னை — 44 ஆகிய இருவரும் பரிசுத் தொகையான இருநூறு ரூபாயைச் சமமாகப் பகிர்ந்து கொள்கிறார்கள்.**

உன் உலகம் வேறே. உன் தேசம் வேறே. உன் மொழி, உன் இயல்பு வேறே. நான் உனக்குச் சரிப்படுவேனா?

அவன் நெஞ்சு ஓட்டம் கண்ணில் தெரிந்து விட்டது.

''நியாயமா நீங்கதான் லக்கி. உங்க லக்குதான் இன்னிக்கு என்னை ஓஹோன்னு தூக்கி வச்சுடுச்சு. பீச்சுக்குப் போகலாமா முரளி?''

பீச்சில் காற்று லேசாய் இருந்தது.

டாக்ஸியில் இறங்கி மீட்டர் கொடியைப் பார்க்கும்போது எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள். ஜோடியாய்ப் போகிறவர்கள் கூட உற்றுக் கவனித்தார்கள். தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள்.

பூச்செடிகள் தாண்டி மணலில் கடல் நோக்கி நடக்க நடக்க இருட்டு அதிகமாயிற்று. நெருங்கி நடந்த லலிதாவின் கையை முரளி பற்றிக் கொண்டான். அந்தப் பற்று லலிதாவை நெருங்கி வரச் செய்தது. லலிதா அவன் மீது துவண்டபடி நடந்தாள். அவன் வலக்கையை இழுத்து இடுப்பில் போட்டுக் கொண்டாள்.

பொதி மணல் காலை இடற, பெண்ணின் நெருக்கம் மனத்தை நெருட முரளி தள்ளாடினான். இன்னும் லலிதாவை இறுக்கிக் கொண்டான். அவன் இறுக்கமும், அவன் விரல் பட்ட இடத்தில் அனுபவித்த அழுத்தமும் தாளாது, லலிதா திண்டாடினாள். வேண்டாமே என்பதுபோல் நின்றாள். கண்களை மூடிக் கொண்டாள். மெல்லப் பிரிந்தாள். துவண்டு மணலில் உட்கார்ந்தாள்.

தன் ஸ்பரிசம் பட்டுப் பெண் தவிப்பது ஆணுக்குச் சந்தோஷமான விஷயம். பெண் பேதையாகி மயங்குவதைக் காணக் கண் கோடி வேண்டும். இருட்டுத்தான். ஆனால் அவள் அசைவுகளில் ஆயிரம் ஆயிரம் விஷயங்கள் புரிந்தன.

''என்ன லலிதா?''

''நான் ரொம்பச் சந்தோஷமா இருக்கேன் முரளி.''

''கல்சுரல் சென்டர்ல பியானோ கேட்டது சொல்றியா?''

''ப்ச்சு. இல்ல முரளி. எனக்குப் பிடிச்ச புருஷனை என் மனசு புரிஞ்சுண்டவரா நீங்க கிடைச்சது சந்தோஷமா இருக்கு முரளி.''

''நான் உனக்கு ஏத்தவனா லலிதா.''

''ஏன் கேக்கறேள்?''

''சாஸர்ல காப்பி குடிக்க ஆரம்பிச்சேன் பாரு முட்டாள்.''

''ப்ச்.... அது சாதாரண விஷயம். உங்களுக்கு பழக்கமில்லே. அதனால.... அப்படி.''

''எனக்கு நிறையத் தெரியாது லலிதா. பியானோ, பியானோ வெஸ்டர்ன் மியூசிக் கல்சுரல் சென்டர், டீ பார்ட்டி நிறைய நான் மிஸ் பண்ணியிருக்கேன்.''

''நாலு தடவை போனாத்தானா வந்துடும். இதெல்லாம் பெரிசில்ல முரளி. மனுஷாளைப் புரிஞ்சுக்கணும். அது என்னன்னு தேடலோட இருக்கணும். இது சரிப்படாது. சரியா வராதுன்னு ரிஜக்ட் பண்ணாம புரிஞ்சுக்க ட்ரை பண்ணணும்.''

''எனக்கு கடைசிவரைக்கும் பியானோ தெரியலேன்னா....''

''போனாப்போறது. பியானோ வாழ்க்கைல ஒரு பகுதி. என் பொழுது போக்கு. அவ்வளவுதான். என்னமோ இது லலிதாவுக்குப் புடிச்சிருக்குன்னு நீங்க புரிஞ்சுக்கிட்டாப் போதும். இனிமே பியானோ வாசிக்கப்படாதுன்னு சொல்லாம இருந்தாப் போதும்.''

''ச்சே... நான் எதுக்குச் சொல்லணும்? மாட்டேன். எனக்குத் தெரியும். உன் உலகம் உன்னுது, என் உலகம் என்னுது.''

''குட்... வெரிகுட், பெண்டாட்டி உலகம் தான் புருஷன் உலகம். புருஷன் உலகத்தில பெண்டாட்டியிருக்கணுங்கறது வேதனை முரளி.''

''தேவையேயில்லே லலிதா.''

''இது புரிஞ்சுண்டா பெண்டாட்டி, புருஷனுக்கு நடுவுல வம்பேயில்லே முரளி.''

''வாஸ்தவம்.''

''முரளி...''

''யெஸ்.''

''உங்களுக்குப் பிடிச்சது என்ன, உங்களுக்கு ரொம்ப உசிரான விஷயம் என்ன?''

முரளிதரன் யோசித்தான்.

(தொடரும்)

*Boost is the secret of my energy!*

"பதினைந்து அல்லது இருபது ஓவர்கள் பந்து வீச்சு அல்லது செமத்தியாக அடிக்கும் பேட்டிங், களத்தில் எப்போதும் ஓட்ட சாட்டம், எமது உத்திகளைக் கையாளுதல். இப்படித்தான் என்னுடைய கிரிக்கெட்டை நான் ரசித்து விரும்புகிறேன்.

இதற்கு உடல் தகுதியான நிலையில் இருப்பதும், ஏராளமான சக்தியும் தேவை. அதனால்தான் நான் ஆண்டு முழுவதும் கடினமாகப் பயிற்சி செய்கிறேன். அதனால்தான் நான் பூஸ்ட் குடிக்கிறேன் நாள் தோறும்."



கபில்தேவ் பூஸ்ட் பருகுவதற்குக் காரணம். அது அவருக்குத் தேவையான சக்தியையும் அவர் விரும்பும் சுவையையும் அளிக்கிறது. பூஸ்டில் கிரீம் நிறைந்த பால் மற்றும் ஆரோக்கியமான மால்ட்டின் குண நலன்களுடன் கோக்கோவும் கலந்துள்ளது.

கபிலைக் கேளுங்கள். அது அவரது ரகசியம்.




# பூஸ்ட்

## இன்சுவைமிக்க சக்தி

HTA 5080 TAM

# மாதக் கடைசியில் வந்த மாமனார்!

கதை: தமிழினியன்
படம்: கரோ





















ஜானகி மகிழ்ச்சியுடன்
அதைக்
கணவனிடம்
தந்து...



அன்று காரியாலயத்தில்
நாளிதழ்களைப்
புரட்டிய
சுதாகர்...




மாலை வீடு திரும்பி...







அப்போது ராமசாமி உள்ளே வந்து...
அப்படி மானம் போகக்கூடாதுன்னுதான் அவங்களை அனுப்பிட்டுத் தலைவலின்னு பொய் சொல்லி நான் மட்டும் திரும்பி வந்தேன், மாப்பிள்ளை...


மாசக் கடைசின்னா என்னன்னு எனக்கும் தெரியும். நானும் உத்தியோகத்-தில் இருந்து ஓய்வு பெற்றவன்-தானே...


அதுவுல...?
அதுவுல நீங்க சிரமப் படுவீங்களேன்னு தான் ரூபாய் தந்தேன். ஆனா மாமி, குழந்தைங்க எதிரே தானமாக் கொடுத்தா வாங்க மாட்டீங்க. தன்மானம்...! எனவேதான் பரிசு விழுந்ததா ரீப் விட்டேன்!


ரீப்பா ?
ஆமாம், மாப்பிள்ளை! பாங்குப் பத்திரம் ஊரிலே பத்திரமா இருக்கு. அதுக்குப் பரிசு விழல. இது என் சொந்தப் பணம்!


சரி...சரி...
அப்படிச் சொல்லாதேம்மா. மாப்பிள்ளை நிலையிலே இருந்திருந்தா நானும் இப்படித்தான் சந்தேகப் பட்டிருப்பேன்...
நல்லா வழிங்க...!

உங்களுக்காகவே



# அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு

## நம்பகமான ஒரே கூந்தல் தைலம்

# குணா

## கூந்தல் தைலம்

தலை மயிர் உதிர்தல், செம்பட்டை நிறம், பருவத்திற்கு முன்பு ஏற்படும் பித்த நரைகள் மாறும். தினசரி தலைக்குத் தடவி வந்தால் தலை மயிர் நீண்டு கறுத்து அடர்த்தியாய் வளரும். தலை அரிப்பு பொடுகு, மண்டையில் சொறிந்தால் செதில் உதிதல் குணமாகும். பெண்கள் ஆண்கள் அனைவரும் விரும்பி உபயோகிக்கின்றனர்.

1 பாட்டில் விலை ரூ. 16-25 V.P.P. உண்டு தபால் செலவு இல்லை.

MAYUR IMPRESS 75/87

தேவைக்கு எழுதவும்

## நவசக்தி வைத்தியசாலை

## தபால் பெட்டி எண் 7 சேலம் 636 001

எமது தைலம் கிடைக்குமிடங்கள்: 1 சேலம் — ரோசு மெடிக்கல்ஸ். 2 சேலம் — செவ்வாய்பேட்டை பிரபாத் மெடிக்கல் ஸ்டோர்ஸ். 3 சேலம் — சாமுண்டி சூப்பர் மார்க்கெட். 4 ஆத்தூர் முத்து மெடிக்கல் . 5 நாமக்கல் — கஸ்தூரிபா மெடிக்கல்ஸ். 6 நாமக்கல் — சரஸ்வதி மெடிக்கல் ஹால். 7 திருச்செங்கோடு—சீனிவாசா மெடிக்கல் ஸ்டோர்ஸ். 8 மேட்டூர் — ஜெயலட்சுமி மெடிக்கல்ஸ். 9 ராசிபுரம் — ராசி மெடிக்கல் ஸ்டோர்ஸ். 10 தர்மபுரி — விஜயலட்சுமி மெடிக்கல் ஸ்டோர்ஸ். 11 கிருஷ்ணகிரி — கோபால கிருஷ்ணா மெடிக்கல்ஸ், 12 கிருஷ்ணகிரி — B.K.P.M.G. மெடிக்கல்ஸ் 13 ஓசூர் — மூர்த்தி (மெடிக்கல்) ஸ்டோர்ஸ் 14 அசூர் — குப்தா மெடிக்கல்ஸ் 15 பெங்களூர் — பிரசாத் ஸ்டோர்ஸ் (K.G. சர்க்கிள்). 16 சென்னை-3 — ஹேமா மெடிக்கல்ஸ் 17 அமிஞ்சக்கரை — வேலவன் மெடிக்கல் ஸ்டோர்ஸ். 18 தி. நகர் — சுந்தரம் (மெடிக்கல்) ஸ்டோர்ஸ் 19 மைலாப்பூர் — R.R. பார்மஸி 20 குடியாத்தம் — திருமகள் மெடிக்கல்ஸ் 21 காஞ்சிபுரம் — லட்சுமி மெடிக்கல்ஸ். 22 அரக்கோணம் — அகிலாம்பிகை மெடிக்கல்ஸ். 23 ஆரணி — பாக்கியம் அண்ட் கோ. 24 ராணிப்பேட்டை—ராணி பார்மஸி 25. திருவண்ணாமலை — அன்னை மெடிக்கல்ஸ். 26 திருவண்ணாமலை — ஸ்ரீ அண்ணாமலையார் மெடிக்கல்ஸ். 27 வேலூர் (N.A.) — பாரத் மெடிக்கல்ஸ். 28 திருப்பத்தூர் (N.A.) — லட்சுமி மெடிக்கல்ஸ். 29 விழுப்புரம் — விசாலம் மெடிக்கல்ஸ் 30 விழுப்புரம் — அன்பு மெடிக்கல்ஸ். 31 கள்ளக்குறிச்சி ராஜு நாட்டு மருந்துக் கடை. 32 பாண்டிச்சேரி — ராஜா மெடிக்கல்ஸ். 33 கடலூர் — சிவா மெடிக்கல்ஸ் 34 விருத்தாச்சலம் — ஜெயா மெடிக்கல் ஸ்டோர்ஸ். 35 சிதம்பரம் — லட்சுமி பார்மஸி. 36 மயிலாடுதுறை — சுவாமி மெடிக்கல்ஸ். 37 கும்பகோணம் — செல்வம் மெடிக்கல்ஸ். 38 தஞ்சாவூர் —சிங்காரம் மெடிக்கல் மார்ட் 39 திருவாரூர் — அன்னபூர்ணா மெடிக்கல்ஸ். 40 நாகை — ரெங்கா ஸ்டோர்ஸ். 41 பட்டுக்கோட்டை — ஹமிதியா மெடிக்கல்ஸ். 42 புதுக்கோட்டை — மீனு பார்மஸி 43 திருச்சி — சண்முகா மெடிக்கல் ஹால் 44 திருச்சி ஜங்ஷன் சுபஸ்ரீ மெடிக்கல்ஸ். 45 திண்டுக்கல் — தமிழ்நாடு சித்த மருந்துக் கடை 46. கரூர் — அண்ணாமலை மெடிக்கல்ஸ். 47 ஈரோடு — ஸ்ரீ ராகவேந்திர சுவாமி மெடிக்கல் ஸ்டோர்ஸ். 48 ஈரோடு — ராஜு மெடிக்கல்ஸ். 49 திருப்பூர்—கீதா மெடிக்கல் ஸ்டோர்ஸ். 50 உடுமலை — ஜூம்ஜூம் மெடிக்கல்ஸ். 51 பொள்ளாச்சி — ராமநாதன் மெடிக்கல்ஸ். 52. கோவை — காசிநாத் அண்ட் கோ. 53 கோவை காந்திபுரம் — திருமலை மெடிக்கல்ஸ். 54 கோபி — வாணி பார்மஸி 55 மேட்டுப்பாளையம் — அலமு மெடிக்கல்ஸ். 56 ஊட்டி — நீலகிரி டிரக் ஸ்டோர்ஸ். 57 பெரியகுளம் — N. லட்சுமணன் மருந்துக்கடை. 58 தேனி — ஸ்ரீ ஆண்டாள் மெடிக்கல் மார்ட். 59 மதுரை-1 — குமார் மெடிக்கல்ஸ். 60 மதுரை-2 — அபிராமி மெடிக்கல்ஸ். 61 மதுரை-1 — தனலட்சுமி ஏஜென்சீஸ். 62 காரைக்குடி — மலேசியா ஜெனரல் ஸ்டோர்ஸ். 63 காரைக்குடி — சரோஜா டிரக் ஸ்டோர்ஸ். 64 சிவகங்கை — கௌரி அண்ட் கோ. (கெமிஸ்ட்). 65 ராமநாதபுரம்— பாத்திமா மெடிக்கல் மார்ட் 66 ராமநாதபுரம் — M.G. ரங்கா ஸ்டோர்ஸ். 67 விருதுநகர் — S.S.K. மெடிக்கல்ஸ், 68 கோவில்பட்டி — சாந்தி மெடிக்கல் ஸ்டோர்ஸ் 69 தூத்துக்குடி — அன்பு மெடிககல்ஸ். 70 தூத்துக்குடி — S.K.A. ஆறுமுகம் நாட்டு மருந்துக்கடை 71 பாளையம்கோட்டை — ஒலிவா இந்தியன் மெடிக்கல்ஸ். 72 திருநெல்வேலி ஜங்ஷன் — கோமதி மெடிக்கல் ஸ்டோர்ஸ். 73 நாகர்கோயில் — S. நல்லபெருமாள் மருந்துக் கடை 74 தென்காசி — M.R. மெடிக்கல்ஸ் 75 ராஜபாளையம் — அரவிந்த் மெடிக்கல்ஸ். 76 ஸ்ரீ வில்லிபுத்தூர் — ஸ்ரீ பாலாஜி மெடிக்கல் ஸ்டோர்ஸ்

இப்பொழுது எல்லா மருந்து கடைகளிலும் மற்றும் மளிகை ஜெனரல் ஸ்டோர்களிலும் கிடைக்கிறது.



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால் 1542ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 75 மாணுக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க சுமார் ரூ 250/– ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ 2500/– மூலதனம் ஏற்படுத்தியோ அல்லது அவ்வப்போது ரூ 250/– அனுப்பியோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம்.

நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும்:

**அத்வைத வித்யாசார்யா மஹா ராஜா ஸாஹேப்**
**ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி**
**D–76, மூன்ருவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,**
**கும்பகோணம்–612 001.**

**இந்த நன்கொடைக்கு 80G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு.**

# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 50
## பராந்தகர் ஆதுரசாலை

று நாள் காலையில் சூரிய பகவான் உதயமாகி உலகத்தை ஒளிமயமாகச் செய்து கொண்டிருந்தார். சூரியனுடைய செங்கிரணங்கள் பழையாறை அரண்மனைகளின் பொற்கலசங்களின் மீது விழுந்து தக தகா மயமாய்ச் செய்து கொண்டிருந்தன. குந்தவைப் பிராட்டியின் மாளிகை முன்றலில் அம்பாரி வைத்து அலங்கரித்த மாபெரும் யானை ஒன்று வந்து நின்றது. குந்தவையும் வானதியும் மாளிகையின் உள்ளேயிருந்து வெளி வந்து மேடைப் படிகளின் மீது ஏறி யானையின் மேல் ஏறிக் கொண்டார்கள். படை வீடுகளுக்கு நடுவில் இருந்த பராந்தக சோழர் ஆதுரசாலையை நோக்கி யானை பூமி அதிரும்படி நடந்து சென்றது. யானைப் பாகன் அதனருகில் நடந்து அதன் நடை வேகத்தைக் குறைத்து அழைத்துச் சென்றான். யானையின் மணி ஓசையைக் கேட்டு நகர மாந்தர் தத்தம் வீடுகளுக்குள்ளேயிருந்து விரைந்து வெளி வந்து பார்த்தார்கள். பெண்ணரசிகள் இருவரையும் கண்டதும் அவர்கள் முகமலர்ந்து கைகூப்பி நின்று முகமன் செலுத்தினார்கள்.

மற்ற வீதிகளைக் கடந்து யானை படை வீடுகள் இருந்த நகரத்தின் பகுதியை அடைந்தது. அந்த வீதிகளின் தோற்றமே ஒரு தனி மாதிரியாகத்தான் இருந்தது. கொழுத்த சேவற் கோழிகள் ஒன்றையொன்று சண்டைக்காகத் தேடிக் கொண்டு சென்றன. வளைந்து சுருண்ட கொம்புகளையுடைய ஆட்டுக்கடாக்கள் ''போருக்கு வருவோர் யாரேனும் உண்டோ?'' என்ற பாவனையுடன் அங்குமிங்கும் பார்த்துக்கொண்டு நின்றன. ரோஷம் மிகுந்த வேட்டை நாய்களைத் தோல் வாரினாலும் மணிக் கயிறுகளினாலும் வீட்டு வாசல் தூண்களில் பிணைத்திருந்தார்கள். சின்னஞ் சிறு பிள்ளைகள் கைகளில் மூங்கில் கழி பிடித்து ஒருவரோடொருவர் சிலம்பம் விளையாடிக் கொண்டிருந்தார்கள். சிலம்பக் கழிகள் மோதிக் கொண்டபோது, 'சட சடா பட படா' என்ற ஓசைகள் எழுந்தன.

வீடுகளின் திண்ணைச் சுவர்களிலே காவிக் கட்டிகளினால் விதவிதமான சித்திரக் காட்சிகள் வரையப்பட்டிருந்தன. பெரும்பாலும் அவை முருகப் பெருமானுடைய லீலைகளையும், சோழ மன்னர்களின் வாழ்க்கை வரலாறுகளையும் சித்திரித்தன. அவற்றில் யுத்தக் காட்சிகளே அதிகமாயிருந்தன. முருகப் பெருமான் சூரபதுமாசுரனுடைய தலைகளை முளைக்க முளைக்க வெட்டித்தள்ளிய காட்சியும், துர்க்கா பரமேசுவரி மகிஷாசுரனை

அமரர் கல்கி

வதம் செய்த காட்சியும் மிகப் பயங்கரமாக எழுதப்பட்டிருந்தன. தெள்ளாறு, தஞ்சை, குடமூக்கு, அரிசிலாறு, திருப்புறம்பயம், வெள்ளூர், தக்கோலம், சேவூர் முதலிய போர்க்களங்களில் சோழ நாட்டு வீரர்கள் நிகழ்த்திய அற்புத பராக்கிரமச் செயல்கள் திண்ணைச் சுவர்களில் தத்ரூபமாகக் காட்சி அளித்தன.


ந்தப் படை வீட்டு வீதிகளில் இளவரசிகள் ஏறியிருந்த யானை வந்ததும் ஒரே அல்லோல கல்லோலமாயிற்று. சேவல்கள் இறகுகளைச் சடசடவென்று அடித்துக்கொண்டு பறந்து கூரை மீது உட்கார்ந்து கூவின. பிள்ளைகள் ஒருவரையொருவர் கூச்சலிட்டு அழைத்துக்கொண்டு ஓடினார்கள். அவரவர்களின் வீட்டுக் கதவுகளைத் தட்டி உள்ளேயிருந்தவர்களுக்குச் செய்தி அறிவித்தார்கள்.

படை வீட்டு வீதிகள் வழியாக யானை சென்றபோது வீட்டு வாசல் தோறும் பெண்களும் குழந்தைகளும் முதியோர்களும் நின்று "இளைய பிராட்டி குந்தவை தேவி வாழ்க!" "சுந்தர சோழரின் செல்வத் திருமகள் வாழ்க!" என்று வாழ்த்தி மகிழ்ந்தார்கள். அவர்களில் சிலர் யானையைத் தொடர்ந்து செல்லவும் ஆரம்பித்தார்கள். வர வர இக்கூட்டம் அதிகமாகி வந்தது. பலவித வாழ்த்தொலிகள் மூலமாகத் தங்கள் மகிழ்ச்சியை அவர்கள் வெளியிட்டுக்கொண்டு வந்தார்கள்.

அப்படை வீடுகளில், இலங்கைக்குப் போர் புரியச் சென்றிருந்த வீரர்களின் பெண்டு பிள்ளைகளும் பெற்றோர்களும் அச்சமயம் வசித்து வந்தார்கள் என்பதை முன்னமே குறிப்பிட்டிருக்கிறோம். அவர்களுடைய நலத்துக்காக ஒரு மருத்துவச் சாலையைக் குந்தவை தன் சொந்த நிலமான்யங்களின் வருமானத்தைக் கொண்டு ஸ்தாபித்திருந்தாள். சோழ குலத்தாரிடம் தம் முன்னோர்களைப் போற்றும் வழக்கம் சிறப்பாக இருந்து வந்தது. குந்தவையின் மூதாதைகளில் அவளுடைய பாட்டனாரின் தந்தையான முதற் பராந்தக சக்கரவர்த்தி மிகப் பிரசித்தி பெற்றவர். அவருடைய பெயர் விளங்கும்படி குந்தவை தேவி இந்தப் 'பராந்தகர் ஆதுர சாலை'யை ஸ்தாபித்து நடத்தி வந்தாள். அடிக்கடி அந்த வைத்தியசாலைக்கு வரும் வியாஜத்தை வைத்துக் கொண்டு போர் வீரர்களின் குடும்பத்தாருடைய க்ஷேம லாபங்களைப் பற்றி அவள் விசாரிப்பது வழக்கம்.


துர சாலைக்கு அருகில் வந்து சேர்ந்ததும் யானை நின்றது. முன்னங் கால்களை முதலில் மடித்துப் பிறகு பின்னங் கால்களையும் மடித்து அது தரையில் படுத்துக்கொண்டது. பெண்ணரசிகள் இருவரும் யானை மேலிருந்து



பூமியில் இறங்கினார்கள்.

யானை சிறிது நகர்ந்து அப்பால் சென்றதும் ஜனக் கூட்டம், — முக்கியமாகப் பெண்கள் — குழந்தைகளின் கூட்டம், தேவிமார்களை நெருங்கிச் சூழ்ந்து கொண்டது.

''ஆதுர சாலை உங்களுக்கெல்லாம் உபயோகமாயிருக்கிறதல்லவா? வைத்தியர்கள் தினந்தோறும் வந்து தேவையானவர்களுக்கு மருந்து கொடுத்து வருகிறார்கள் அல்லவா?'' என்று இளவரசி கேட்டாள்.

''ஆம், தாயே! ஆம்!'' என்று பல குரல்கள் மறுமொழி கூறின.

''மூன்று மாதமாக இருமலினால் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தேன். ஒரு வாரம் வைத்தியரிடம் மருந்து வாங்கிச் சாப்பிட்டதில் குணமாகி விட்டது!'' என்றாள் ஒரு பெண்மணி.

''அம்மா! என் மகன் மரத்தின் மேல் ஏறி விழுந்து காலை ஒடித்துக் கொண்டான். வைத்தியர் கட்டுப் போட்டு விட்டுப் பதினைந்து நாள் மருந்து கொடுத்தார். சுகமாகிவிட்டது. இப்போது துள்ளி ஓடி விளையாடுகிறான். மறுபடி மரத்தின் மேல் ஏறவும் ஆரம்பித்துவிட்டான்!'' என்றாள் இன்னொரு ஸ்திரீ.

''என் தாயாருக்குக் கொஞ்ச காலமாகக் கண் மங்கலடைந்து வந்தது. ஒரு மாதம் இந்த ஆதுர சாலைக்கு வந்து மருந்து போட்டுக் கொண்டு வந்தாள். இப்போது கண் அவளுக்கு நன்றாய்த் தெரிகிறது!'' என்றாள் இளம் பெண் ஒருத்தி.

''பார்த்தாயா வானதி! நம் தமிழகத்தில் வாழ்ந்த முன்னோர்கள் எப்பேர்ப்பட்டவர்கள்? இன்ன வியாதியை இன்ன மூலிகையினால் தீர்க்கலாம் என்று அவர்கள் எப்படித்தான் கண்டுபிடித்தார்களோ தெரியவில்லை!'' என்றாள் குந்தவைப் பிராட்டி.

''ஞானக் கண் கொண்டு பார்த்துத்தான் அவர்கள் இவ்வளவு அதிசயமான மருந்துகளைக் கண்டு பிடித்திருக்க வேண்டும். வேறு எப்படி முடியும்?'' என்றாள் வானதி.

''எவ்வளவோ அதிசயமான மருந்துகளை அவர்கள் கண்டு பிடித்திருப்பது உண்மைதான். ஆனால் உன்னைப் போல் மனோவியாதியினால் வருந்துகிறவர்களுக்கு மருந்து ஒன்றும் கண்டுபிடிக்கவில்லையே? என்ன செய்வது?''

''அக்கா! எனக்கு ஒரு மனோவியாதியும் இல்லை. கருணை கூர்ந்து இவ்விதம் அடிக்கடி சொல்லாதிருங்கள்! என் தோழிகள் ஓயாது என்னைப் பரிகசித்து என் பிராணனை வாங்குகிறார்கள்!''

''நன்றாக வேண்டுமடி உனக்கு! உலகத்தில் ஒரு கவலையும் இல்லாமல் வாழ்ந்து வந்த என் தம்பியின் மனம் பேதலிக்கும்படி செய்துவிட்டாய் அல்லவா? ஒவ்வொரு தடவையும் இலங்கையிலிருந்து ஆள் வரும்போதெல்லாம் உன் உடம்பு எப்படியிருக்கிறது என்று கேட்டு அனுப்புகிறானே!'' என்றாள் இளைய பிராட்டி.





தற்குள் "வைத்தியருக்கு வழி விடுங்கள்! வைத்தியருக்கு வழி விடுங்கள்!" என்று கோஷம் கேட்டது. அங்கே சூழ்ந்து நின்றவர்களைக் காவலர்கள் விலக்கினார்கள். ஆதுர சாலையின் வயது முதிர்ந்த தலைமை வைத்தியர் வந்து இளவரசிகளை வரவேற்று உபசரித்தார்.

"வைத்தியரே! கோடிக்கரைப் பக்கத்துக்காடுகளில்சிலஉயர்ந்தமூலிகைகள் இருக்கின்றனவென்று சொன்னீர் அல்லவா? அங்கே போய் வருவதற்காக ஒரு வாலிப வீரரை அனுப்பினேனே? அவர் வந்தாரா?" என்று குந்தவை கேட்டாள்.

"ஆம், தாயே! அந்தச் சூடிகையான இளம் பிள்ளை வந்தான். ஈசான சிவ பட்டர் அழைத்துக் கொண்டு வந்தார். அவனுடன் என் மகன் ஒருவனை அனுப்பி வைக்கிறேன். என் மகன் கோடிக்கரையிலிருந்து திரும்பி வந்து விடுவான். தாங்கள் அனுப்பிய வீரன் இலங்கைத் தீவுக்கும் போய் வருவதாகச் சொல்கிறான்...."

"இலங்கையிலிருந்து கூடவா மூலிகை கொண்டு வர வேண்டும்!" என்று வானதி கேட்டாள்.

"ஆம், தாயே! லக்ஷ்மணருடைய உயிரைக் காப்பாற்றுவதற்காக அனுமார் சஞ்சீவி பர்வதம் கொண்டு வந்தபோது கோடிக்கரை வழியாகத்தான் கடலைத் தாண்டினாராம். அப்போது சஞ்சீவி மலையிலிருந்து சில மூலிகைகள் கோடிக்கரைக் காட்டில் விழுந்தபடியால்தான் அங்கே இன்றைக்கும் நல்ல மூலிகைகள் கிடைக்கின்றன. இலங்கையில் சஞ்சீவி பர்வதமே இருந்தபடியால் அங்கே இன்னும் அபூர்வமான மூலிகைகள் கிடைக்கும் அல்லவா? நான் எதிர்பார்க்கும் மூலிகைகள் மட்டும் கிடைத்துவிட்டால், சக்கரவர்த்தியின் நோயை நானே கட்டாயம் குணப்படுத்தி விடுவேன்...."

"கடவுள் கிருபையினால் அப்படியே ஆகட்டும். இப்போது அந்த வாலிபர்கள் இருவரும் எங்கே?"

"உள்ளே இருக்கிறார்கள், அம்மா! பிரயாணத்துக்கு ஆயத்தமாகத் தங்களிடம் விடை பெற்றுக் கொண்டு புறப்படக் காத்திருக்கிறார்கள்!"



லைமை மருத்துவர் அழைத்துச் செல்ல இளவரசிகள் இருவரும் ஆதுர சாலைக்குள் சென்றார்கள். அங்கே தாழ்வாரங்களில் மருந்து வாங்கிக் கொண்டு வந்தவர்களையும் மருந்துக்காகக் காத்திருப்பவர்களையும் பார்த்துக் கொண்டு நடந்தார்கள். அவர்கள் அனைவரும் குந்தவைப் பிராட்டியைப் பார்த்ததும் அகமும் முகமும் மலர்ந்து இவ்வளவு நல்ல மருத்துவ சாலையைத் தங்களுக்கு ஏற்படுத்திக் கொடுத்ததற்காக இளவரசியை வாழ்த்தினார்கள்.

தலைமை மருத்துவரின் அறையில் இருவர் காத்திருந்தனர். அவர்களில் நம் வந்தியத் தேவன் புதிய முறையில் உடை அணிந்திருந்ததைப் பார்த்து இளையபிராட்டி புன்னகை பூத்தாள். வானதிக்கும் அவ்வீரனை ஒருவாறு அடையாளம் தெரிந்துவிட்டது. குந்தவையின் காதோடு, "அக்கா! குடந்தை ஜோதிடரின் வீட்டில்பார்த்தவர் மாதிரி இருக்கிறதே!" என்றாள்.

"அவர் மாதிரிதான் எனக்கும் தோன்றுகிறது. ஜோதிடரைப் பார்த்த பிறகு வைத்தியரிடம் வந்திருக்கிறார். உன் மாதிரியே இவருக்கும் ஏதாவது சித்தக் கோளாறு போலிருக்கிறது!" என்று சொல்லிவிட்டு, வந்தியத் தேவனைப் பார்த்து, "ஏன் ஐயா! சக்கரவர்த்தியின் உடல் நலத்துக்காக மூலிகை கொண்டு வருவதற்கு இலங்கைக்குப் போக ஒப்புக் கொண்டவர் நீர்தானா?" என்று கேட்டாள்.

வந்தியத்தேவனுடைய கண்களும் கண்ணிமைகளும் வேறு ஏதோ இரகசிய பாஷையில் பேசின. அவன் வாயினால், "ஆம், இளவரசி! நான் தான் இலங்கைக்குப் போகிறேன். ஒருவேளை அங்கு இளவரசரைப் பார்த்தாலும் பார்ப்பேன். அவருக்கு ஏதாவது செய்தி சொல்ல வேண்டுமா?" என்று கேட்டான்.

"பார்த்தால் அவசியம் இந்தச் செய்தியைச் சொல்லுவீர். கொடும்பாளூர் இளவரசி வானதிக்கு உடம்பு சரியாகவே இல்லை. அடிக்கடி நினைவு இழந்து மூர்ச்சை போட்டு விழுகிறாள். இளவரசியைச் சுயப் பிரக்ஞையோடு பார்க்க வேண்டுமானால் உடனே புறப்பட்டு வர வேண்டும் என்பதாகத் தெரிவிக்க வேண்டும்" என்றாள் இளையபிராட்டி.

"அப்படியே தெரிவிக்கிறேன், அம்மணி!" என்று கூறி வந்தியத் தேவன் வானதியை நோக்கினான்.



ந்தவையின் வார்த்தைகளைக் கேட்டதும் உண்டான நாணத்தினால் வானதியின் இனிய முகம் இன்னும் பன்மடங்கு அழகு பெற்றுப் பொலிந்தது. பொங்கி வந்த நாணத்தையும் கூச்சத்தையும் சமாளித்துக் கொண்டு வானதி தட்டுத் தடுமாறி, "ஐயா! அப்படியொன்றும் தாங்கள் சொல்லி விட வேண்டாம். ரொம்பவும் தங்களைக் கேட்டுக் கொள்கிறேன். கொடும்பாளூர் வானதி இளையபிராட்டியின் போஷணையில் தினம் நாலு வேளை உண்டு உடுத்துச் சுகமாக இருப்பதாகத் தெரியப்படுத்துங்கள்" என்றாள்.

"அப்படியே தெரிவித்து விடுகிறேன், அம்மணி!" என்றான் வந்தியத் தேவன்.

"அழகாயிருக்கிறது! நான் கூறியதையும் 'அப்படியே தெரிவிக்கிறேன்' என்றீர். இவள் சொன்னதையும் 'அப்படியே தெரிவிக்கிறேன்' என்று ஒப்புக் கொள்கிறீரே? இரண்டில் ஏதாவது ஒன்றுதானே உண்மையாக இருக்க முடியும்?"

"அதனால் என்ன, அம்மணி! வாதி கூறியதையும் பிரதிவாதி சொன்னதையும் அப்படி அப்படியே நான் சொல்லி விடுகிறேன். எது உண்மை, எது இல்லை என்பதை இளவரசரே நீதிபதியாக இருந்து தீர்மானித்துக் கொள்ளட்டும்!" என்று சொன்னான் வந்தியத் தேவன்.

"ஆனால் ஒருவர் சொன்னதை இன்னொருவர் சொன்னதாக மட்டும் மாற்றிச் சொல்லிவிட வேண்டாம்! உமக்குப் புண்ணியம் உண்டு!" என்றாள் வானதி.

குந்தவை இந்தப் பேச்சை அத்துடன் நிறுத்த விரும்பி, "வைத்தியரே! அரண்மனைத் திருமந்திர அதிகாரியிடமிருந்து இவர்களுக்குக் கொடுத்து அனுப்ப ஓலை கிடைத்ததா?" என்று கேட்டாள்.

"கிடைத்தது தாயே! 'சக்கரவர்த்திக்கு வைத்தியம் செய்வதற்காக இவர்கள் மூலிகை கொண்டு வரப் போவதால் வழியிலுள்ள அரசாங்க அதிகாரிகள் எல்லாரும் இவர்கள் கோரும் உதவி செய்ய வேண்டும்' என்று பொதுவாக ஓர் ஓலையும், கோடிக் கரைக் கலங்கரை விளக்கக் காவலருக்குத் தனியாக ஓர் ஓலையும் கிடைத்தன. இவர்களிடம் கொடுத்து விட்டேன்!" என்றார் வைத்தியர்.

"அப்படியானால் ஏன் தாமதம்? உடனே புறப்பட வேண்டியதுதானே" என்றாள் இளையபிராட்டி குந்தவை.

"ஆம்; புறப்பட வேண்டியது தான்!" என்றான் வந்தியத் தேவன்.

ஆனால் உடனே புறப்பட்டு விடுங் காரியம் அவ்வளவு சுலபமாக இல்லை.



ருத்துவ சாலையிலிருந்து அவர்கள் வெளியேறி வெளியில் வந்தார்கள். அரசகுமாரிகளை ஏற்றிச் செல்ல அம்பாரியானை காத்திருந்தது. வந்தியத் தேவனையும் அவனுடைய துணைவனையும் ஏற்றிக் கொண்டு காற்றாகப் பறந்து செல்வதற்கு அரண்மனைக் குதிரைகள் இரண்டு துடி துடித்துக் கொண்டு நின்றன.

ஆனால் வந்தியத்தேவனுக்குத் திடீர் திடீர் என்று ஏதாவது சந்தேகம் ஏற்பட்டுக் கொண்டிருந்தது. குந்தவைக்கும் புதிது புதிதாக எச்சரிக்கை செய்வதற்கு ஏதேனும் விஷயம் தோன்றிக் கொண்டிருந்தது. போகும் வழியில் அவர்களுக்கு ஏற்படக்கூடிய அபாயங்களைப் பற்றிக் குந்தவை முக்கியமாக எச்சரிக்கை செய்தாள்.



அரசகுமாரிகள் அம்பாரி யானை மீது ஏறிக் கொண்டார்கள்.

பிறகு வந்தியத்தேவனும் அவனுடைய துணைவனும் குதிரைகள்மீது ஏறினார்கள்.

யானை புறப்படுகிற வழியாகத் தோன்றவில்லை. நெடுந்தூரம் பிரயாணம் போகிறவர்கள்தான் முதலில் புறப்பட வேண்டும் என்று குந்தவை குறிப்பினால் தெரியப்படுத்தினாள்.

வந்தியத்தேவன் மனமின்றித் தயக்கத்துடன் குதிரையைத் திருப்பினான். இன்னும் ஒருமுறை ஆவல் ததும்பிய கண்களுடன் இளவரசியைத் திரும்பிப் பார்த்தான். பிறகு குதிரையின் பேரில் கோபங்கொண்டவன் போல் சுளீர் என்று ஓர் அடி கொடுத்தான். ரோஷம் மிகுந்த அந்தக் குதிரை நாலு கால் பாய்ச்சலில் பிய்த்துக் கொண்டு பறந்துசென்றது. அவனைத்தொடர்ந்து போவதற்கு வைத்தியரின் புதல்வன் திணற வேண்டியிருந்தது.

யானை திரும்பிச் செல்லத் தொடங்கிய பிறகு குந்தவை சிந்தனையில் ஆழ்ந்தாள். இந்த மனதுதான் என்ன விசித்திரமான இயல்பை உடையது? மன்னாதி மன்னர்களையும் வீராதி வீரர்களையும் நிராகரித்த இந்த மனது வழிப் போக்கனாக வந்த இவ்வாலிபனிடம்ஏன் இவ்வளவு சிரத்தைகொள்கிறது? இவன் ஏற்றுக் கொண்ட காரி

யத்தை வெற்றியுடன் முடித்துக் கொண்டு பத்திரமாய்த் திரும்ப வேண்டுமே என்று ஏன் இவ்வளவு கவலைப் படுகிறது?.....

"அக்கா! என்ன யோசிக்கிறீர்கள்?" என்ற வானதியின் குரல் குந்தவையை இந்த உலகத்துக்குக் கொண்டு வந்தது.

"ஒன்றுமில்லை வானதி! அந்த வாலிபனுடைய அகம்பாவ சுபாவத்தைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன். அவனிடம் என் தம்பிக்கு ஏன் செய்தி சொல்லி அனுப்பினோம் என்று இப்போது தோன்றுகிறது..."

"ஆம், அக்கா! அவன் ரொம்பப் பொல்லாதவன் தான்! பெரிய கொள்ளைக்காரன் என்று கூடச் சொல்லத் தோன்றுகிறது...."

"அது என்ன? கொள்ளைக்காரன் என்று எதனால் சொல்கிறாய்?"

"சாதாரண கொள்ளைக்காரர்கள் பொன் வெள்ளி முதலிய பயனற்ற பொருள்களைக் கொள்ளையடிப்பார்கள். இந்த வாலிபன் சோழ வள நாட்டின் குல தெய்வத்தையே கொள்ளையடித்துக் கொண்டு போய் விடுவான் என்று எனக்குப் பயமாயிருக்கிறது. தாங்கள் அதற்கு இடங் கொடுக்க மாட்டீர்கள் அல்லவா?" என்று வானதி கூறினாள்.

"அடி கள்ளி! உன்னைப் போல் என்னையும் நினைத்து விட்டாயா? அப்படியெல்லாம் ஒருநாளும் நடவாது!" என்றாள் குந்தவை.



யானை திரும்பிச் சிறிது தூரம் சென்ற போது வீதியில் ஓரிடத்தில் பெண்கள் பலர் கூட்டம் கூடி நிற்பதை அரசிளங்குமரிகள் பார்த்தார்கள். யானையை நிறுத்தச் செய்துவிட்டு, "ஏன் கூட்டம் கூடி நிற்கிறீர்கள்? ஏதாவது சொல்ல வேண்டுமா?" என்று இளைய பிராட்டி குந்தவை கேட்டாள்.

அந்தப் பெண்களில் ஒருத்தி முன் வந்து, "தாயே! இலங்கையில் உள்ள எங்கள் புருஷர்களைப்பற்றி ஒருசெய்தியும் இல்லையே! அவர்களுக்கு இங்கிருந்து அரிசி அனுப்பக் கூடாதென்று தஞ்சாவூர்க்காரர்கள் தடுத்துவிட்டார்களாமே? வயிற்றுக்குச் சாப்பாடு இல்லாமல் எப்படி அம்மா, அவர்கள் சண்டை போட முடியும்?" என்று கேட்டாள்.

"அதற்காக நீங்கள் கவலைப்பட வேண்டாம். மாமல்லபுரம் துறைமுகத்திலிருந்து அவர்களுக்கு வேண்டிய தானியம் போய்க் கொண்டிருக்கிறது. தஞ்சாவூர்க்காரர்கள் என்ன செய்தாலும், உங்கள் இளவரசர் சும்மா விட்டு விடுவாரா? சோழ நாட்டு மகாவீரர்கள் பட்டினி கிடக்கும்படி பார்த்துக் கொண்டிருந்து விடுவாரா!" என்றாள் இளைய பிராட்டி.

வேறொரு சந்தர்ப்பமாயிருந்தால், குந்தவை அங்கேயே இறங்கி அந்தப் பெண்களுக்கு மேலும் சமாதானம் சொல்லியிருப்பாள். இப்போது அவளுடைய மனம் வேறுவிதமான சஞ்சலத்துக்கு உள்ளாகியிருந்தபடியால் தனிமையை விரும்பினாள். யானை அரண்மனையை நோக்கிச் சென்றது.

## அத்தியாயம் 51
## மாமல்லபுரம்

நேயர்கள் ஏற்கெனவே நன்கு அறிந்துள்ள மாமல்லபுரத்துக்கு இப்போது அவர்களை அழைத்துச் செல்ல விரும்புகிறோம்.

மகேந்திர பல்லவரும் மாமல்ல நரசிம்மரும் இத்துறைமுகப் பட்டினத்தை அற்புதச் சிற்பவேலைகளின் மூலம் ஒரு சொப்பனபுரியாகச் செய்த காலத்திற்குப் பிறகு இப்போது முந்நூறு ஆண்டுகளுக்கு மேலேயே ஆகிவிட்டன.

நகரத்தின் தோற்றம் ஓரளவு மங்கியிருக்கிறது. மாறுதல் நம் மனத்துக்கு மகிழ்ச்சி தரவில்லை.

மாடமாளிகைகள் இடிந்து விழுந்து பாழடைந்து கிடக்கின்றன. வீதிகளிலும் துறைமுகத்திலும் முன்போல் அவ்வளவு ஜனக்கூட்டம் இல்லை. வர்த்தகப் பெருக்கமும் அவ்வளவாக இல்லை. பெரிய பெரிய பண்டகசாலைகள் இல்லை. வீதிகளிலெல்லாம் ஏற்றுமதி இறக்குமதிப் பண்டங்கள் மலை மலையாகக் குவிந்திருக்கவில்லை.

கடல் பூமிக்குள் புகுந்து ஆழம் மிகுந்த கால்வாயாக அமைந்து கப்பல்கள் வந்து பத்திரமாய் நிற்பதற்குரிய இயற்கைத் துறைமுகமாக இருந்ததை முன்னர் பார்த்தோம். இப்போது அந்தக் கால்வாயில் மணல் அடித்து அடித்துத் தூர்ந்து போய் ஆழம்வெகுவாகக் குறைந்துபோயிருக்கிறது. ஆழமற்ற அக்கடற்கழியில் சிறிய படகுகளும் ஓடங்களும்தான் வரக்கூடும். நாவாய்களும் மரக்கலங்களும் சற்றுத் தூரத்தில் கடலிலேதான் நிற்க வேண்டும். படகுகளில் வர்த்தகப் பொருள்களை ஏற்றிச் சென்று அந்த மரக்கலங்களில் சேர்ப்பிக்க வேண்டும்.

மேலே கூறிய இடைக் காலத்தில் மாமல்லபுரம் சில புதிய சிறப்புக்களையும் அடைந்திருந்ததைக் குறிப்பிட வேண்டும். முக்கியமாக கடற்கரையோரத்தில் விளங்கிய அழகிய கற்கோயில் நம் கண்களையும் கருத்தையும் கவர்கின்றது. அது மகேந்திரன் —

மாமல்லன் காலத்தில் அமைக்கப் பட்ட குன்றுகளைக் குடைந்தெடுத்த கோவில்களைப் போன்றதல்ல. குன்றுகளிலிருந்து கற்களைப் பெயர்த்துக் கொண்டு வந்து கட்டப்பட்ட கோயில். சமுத்திர ராஜனுடைய தலையில் சூட்டப்பட்ட அழகிய மணி மகுடத்தைப் போல் விளங்குகிறது. அடடா! அந்தக் கோயில் அமைப்பின் அழகை என்னவென்று சொல்வது?

இதைத் தவிர நகரத்தின் நடுவே மூவுலகும் அளந்த பெருமாள் சயனித் திருக்கும் விண்ணகரக் கோயில் ஒன்றும் காட்சி அளிக்கிறது. சைவத்தையும் வைஷ்ணவத்தையும் இரு கண்களைப் போல எண்ணிப் போற்றி வளர்த்த பரமேசுவர பல்லவன் திருப்பணி செய்த விண்ணகரம் அது. திருமங்கையாழ்வார் இந்தக் கோயிலுக்கு வந்து தலசயனப் பெருமாளைத் தரிசித்துப் பக்தி வெள்ளம் பெருக்கெடுத்து ஓடும் தமிழ்ப் பாடல்களைப் பாடியிருக்கிறார். அவருடைய காலத்திலேகூடப் பல்லவ சாம்ராஜ்யம் பெருகி வளர்ந்த சிறப்புடன் விளங்கியது என்பதையும் மாமல்லபுரம் செல்வம் கொழிக்கும் துறைமுகமாக விளங்கியது என்பதையும் பின்வரும் பாசுரத்தின் மூலம் நன்கு அறியலாம்:—

"புலன்கொள் நிதிக்குவை யொடு
புழைக்கை மா களிற்றினமும்
நலங்கொள் நவமணிக் குவையும்
சுமந்தெங்கும் நான் றொசிந்து
கலங்கள் இயங்கும் மல்லைக்
கடல் மல்லைத் தலசயனம்
வலங்கொள் மனத்தாரவரை
வலங்கொள் என் மட
நெஞ்சே!"

திருமங்கையாழ்வாரின் காலத்துக்குப் பிற்பட்ட நூறாண்டுக் காலத்தில் பல்லவ சாம்ராஜ்ய சூரியன் அஸ்தமித்துவிட்டது. 'கல்வியில் இணையில்லாத காஞ்சி' மாநகரின் சிறப்பும் குறைந்துவிட்டது. 'கலங்கள் இயங்கும் கடல் மல்லை'யின் வர்த்தக வளமும் குன்றி வந்தது.

ஆனால் தமிழகத்துக்கு அழியாப் புகழ் அளிப்பதற்கென்று அமைந்த அந்த அமர நகரத்தின் அற்புதச் சிற்பக் கலைகளுக்கு மட்டும் எந்தவிதக் குறை



வும் நேரவில்லை. பாறைச் சுவர்களில் செதுக்கப்பட்ட சித்திர விசித்திரமான சிற்பங்களும் குன்றுகளைக் குடைந்து எடுத்து அமைத்த விமான ரதங்களும் முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னால் அவற்றை அமைத்த காலத்தில் விளங்கியது போலவே இன்றைக்கும் புத்தம் புதியனவாக விளங்கின. பண்டங்களை ஏற்றுமதி செய்வதற்காக வந்த வர்த்தகர்களின் கூட்டத்தைக் காட்டிலும் சிற்பச் செல்வங்களைக் கண்டு களித்துப் போவதற்காக வந்த ஜனக் கூட்டம் அதிகமாயிருந்தது.

மாமல்லபுரத்து வீதிகளின் வழியாக இரட்டைக் குதிரைகள் பூட்டிய அழகிய விமான ரதம் ஒன்று சென்றது. குதிரைகளின் அலங்காரங்களும், ரதத்தின் வேலைப்பாடுகளும், பொன் தகடு வேய்ந்து மாலை வெயிலில் மற்றொரு சூரியனைப்போல் பிரகாசித்த ரதத்தின் மேல்விதானமும் அதில் இருந்தவர்கள் அரசகுலத்தினராயிருக்கவேண்டும் என்பதை உணர்த்தின.

ஆம்; அந்தப் பொன் ரதத்தின் விசாலமான உட்புறத்தில் அரசகுலத்தினர் மூவர் அமர்ந்திருந்தார்கள். அவர்களில் ஒருவன்தான், வீராதி வீரனும் சுந்தர சோழரின் மூத்த குமாரனுமான ஆதித்த கரிகாலன். மிக இளம்பிராயத்திலேயே இவன் போர்க்களத்துக்குச் சென்று செயற்கரும் வீரச்செயல்கள் புரிந்தான். மதுரை வீர பாண்டியனை இறுதிப் போரில் கொன்று, "வீரபாண்டியன் தலை கொண்ட கோப்பரகேசரி" என்று பட்டப்பெயர் பெற்றான். வீரபாண்டியன் வீர சொர்க்கம் அடைந்து பாண்டிய நாடு சோழ சாம்ராஜ்யத்தின் கீழ் வந்த உடனடியாகத்தான் சுந்தரசோழர் நோய்வாய்ப்பட்டார். ஆதித்த கரிகாலனே அடுத்த பட்டத்துக்கு உரியவன் என்பதை ஐயமற நிலைநாட்ட அவனுக்கு யுவராஜ்ய பட்டாபிஷேகம் செய்வித்தார். அதுமுதல் கல்வெட்டுக்களில் தன் பெயரைப் பொறித்துச் சாஸனம் அளிக்கும் உரிமையும் ஆதித்தகரிகாலன் பெற்றான்.

பின்னர், தொண்டைமண்டலத்தை இரட்டை மண்டலத்துக் கன்னர தேவனுடைய ஆதிக்கத்திலிருந்து முழுதும் விடுவிக்கும் பொருட்டு ஆதித்த கரிகாலன் வடநாட்டுக்குப் பிரயாணமானான். அங்கேயும் பல போர்க்களங்களில் செயற்கரும் வீரச் செயல்களைப் புரிந்தான். இரட்டை மண்டலத்துப் படைகளை வட பெண்ணைக்கு வடக்கே துரத்தியடித்தான். மேலும் வடதிசையில் படையெடுத்துச் செல்வதற்குப் படை பலத்தைப் பெருக்கிக் கொள்ளுதல் அவசியமாயிற்று. ஆதலின் காஞ்சியில் வந்து தங்கிப் படை திரட்டவும் மற்றும் படையெடுப்புக்கு அவசியமான ஆயுத தளவாட சாமக்ரியைகளைத் திரட்டவும் தொடங்கினான். இந்த நிலையில் பழுவேட்டரையர்கள் அவனுடைய முயற்சிக்குத் தடங்கல் செய்யத் தொடங்கினார்கள். இலங்கைப் போர் முடிந்த பிறகுதான் வடநாட்டுப் படையெடுப்புத் தொடங்கலாம் என்று சொன்னார்கள். இன்னும் பலவிதமான வதந்திகளும் காற்றிலே மிதந்து வரத் தொடங்கின. இலங்கையில் போர் செய்யச் சென்றுள்ள படைக்குச் சோழ நாட்டிலிருந்து வேண்டிய உணவுப் பொருள் போகவில்லையென்று தெரிந்தது. இதுவெல்லாம் ஆதித்த கரிகாலனுடைய வீர உள்ளம் துடித்துக் கொந்தளித்துக் கொண்டிருந்தது.

நமது கதை நடந்த காலத்துக்கு முன்னும் பின்னும் சுமார் முந்நூறு ஆண்டு காலத்தில் தமிழ் அன்னையின் திருவயிற்றில் இதிகாச காவியங்களில் நாம் படிக்கும் மகா வீரர்களையொத்த வீரப் புதல்வர்கள் தோன்றிக் கொண்டிருந்தார்கள். வீமனையும் அர்ச்சுனனையும் பீஷ்மரையும் துரோணரையும் கடோத்கஜனையும் அபிமன்யுவையும் ஒத்த வீரர்கள் தமிழகத்தில் அவதரித்தார்கள். உலகம் வியக்கும்படியான தீரச் செயல்களைப் புரிந்தார்கள்.

போரில் அடைந்த ஒவ்வொரு வெற்றியும் இவர்களுடைய தோள்களுக்கு மேலும் வலி அளித்தன. வயது முதிர்ந்தகிழவர்கள் மலையைப்பெயர்த்தெடுக்கும்வலிமைபெற்றிருந்தார்கள். பிராயம் ஆகாத இளம் வாலிபர்கள் காற்றில் ஏறிச் சென்று வான முகட்டை அடைந்து விண் மீன்களை உதிர்க்கும்ஆற்றல்பெற்றிருந்தார்கள்.

இப்படிப்பட்ட வீரர்கள் இருவர் அச்சமயம் ஆதித்த கரிகாலன் ஏறிச் சென்ற ரதத்தில் அவனுடன் சம ஆசனத்தில் உட்கார்ந்திருந்தார்கள்.

இவர்களில்ஒருவர்திருக்கோவலூர் மலையமான். இவர் ஆண்ட மலைய மானுடு வழக்கத்தில் பெயர் சுருங்கி 'மலாடு' என்றும் 'மிலாடு' என்றும் வழங்கியது. ஆகையால் இவருக்கு 'மிலாடுடையார்' என்ற பட்டப் பெயர் ஏற்பட்டிருந்தது.

சுந்தர சோழ சக்கரவர்த்தியின் இரண்டாவதுபத்தினியாகியவானமாதேவி இவருடைய செல்வத் திருமகள் தான். எனவே, ஆதித்த கரிகாலனுடைய பாட்டனுர் இவர். முதிர்ந்த பிராயத்திலும் நிறைந்த அறிவிலும் இவர் கௌரவர்களின் பாட்டனுரான பீஷ்மரை ஒத்திருந்தார். ஆதித்த கரிகாலன் இவரிடம்பெரும்பக்தி வைத்திருந்த போதிலும் இவருடைய புத்திமதி சில சமயம் அந்த வீர இளவரசனின் பொறுமையைச் சோதித்தது.

ரதத்தில் இருந்தவர்களில் இன்னெருவன் பார்த்திபேந்திரன். இவன் பழைய பல்லவர் குலத்திலிருந்து கிளை வழி ஒன்றில் தோன்றியவன். ஆதித்த கரிகாலனை விட வயதில் சிறிது மூத்தவன். அரசுரிமை அற்றவனுதலால் போர்க்களத்தில் தன் ஆற்றலைக் காட்டி வீரப் புகழை நிலைநாட்ட விரும்பினுன். ஆதித்த கரிகாலனைச் சென்றடைந்தான். வீரபாண்டியனேடு நடத்திய போரில் ஆதித்த கரிகாலனுக்கு வலது கையைப் போல இருந்து உதவி புரிந்தான். இதனுல் ஆதித்த கரிகாலனுடைய அந்தரங்க நட்புக்கு உரியவனுனுன். வீரபாண்டியன் விழுந்த நாளிலிருந்து இருவரும் இணைபிரியாத்தோழர்கள் ஆனுர்கள்.

இந்த மூவரும் ரதத்தில் சென்ற





போது தஞ்சாவூரிலிருந்து பராபரியாக வந்த செய்திகளைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள்.

''இந்தப் பழுவேட்டரையர்களின் அகம்பாவத்தை இனிமேல் என்னால் ஒருகணமும் சகித்துக் கொண்டிருக்க முடியாது. நாளுக்கு நாள் அவர்கள் வரம்பு கடந்து போகிறார்கள். நான் அனுப்பிய தூதன் பேரில் 'ஒற்றன்' என்ற குற்றம் சுமத்துவதற்கு இவர்களுக்கு எத்தனை அகந்தை இருக்க வேண்டும்? அவனைப் பிடித்துக் கொடுப்பவர்களுக்கு ஆயிரம் பொன் வெகுமதி கொடுப்பதாகப் பறையறைவித்தார்களாமே? இதையெல்லாம் நான் எப்படிப் பொறுக்க முடியும்? என் உறையிலுள்ள வாள் அவமானத்தில் குன்றிப் போயிருக்கிறது. நீங்களோ பொறுமை உபதேசம் செய்கிறீர்கள்!'' என்றான் ஆதித்த கரிகாலன்.

''பொறுமைஉபதேசம்நான்செய்யவில்லை. ஆனால் இந்த மாதிரி முக்கியமான காரியத்துக்கு வந்தியத் தேவனை அனுப்ப வேண்டாம் என்று மட்டும் அப்போதே சொன்னேன். அந்தப் பதற்றக்காரன் காரியத்தைக் கெடுத்து விடுவான் என்று எனக்குத் தெரியும்! வாளை வீசவும் வேலை எறியவும் மட்டும் தெரிந்திருந்தால் போதுமா? இராஜ காரியமாகத் தூது செல்கிறவனுக்குப் புத்திக் கூர்மை இருக்க வேண்டும்...'' என்று கூறினான் பார்த்திபேந்திரன்.

இளவரசன் கரிகாலன் வந்தியத் தேவனிடம் காட்டிய அபிமானம் பார்த்திபேந்திரனுக்குப் பிடிப்பதில்லை. எப்போதும் அவனைப் பற்றி ஏதாவது குறை சொல்லிக் கொண்டிருப்பான். அவன் செய்யும் எந்தக் காரியத்திலும் குற்றம் கண்டுபிடிப்பான். ஆகையால் இந்தச் சந்தர்ப்பத்திலும் அவ்வாறு குற்றம் சொன்னான்.

''ஆரம்பித்து விட்டாயா, உன் கதையை? வந்தியத்தேவன் பேரில் ஏதாவது சொல்லிக் கொண்டிராவிட்டால் உனக்குப் பொழுது போகாது. அவனுக்குப் புத்திக் கூர்மையில்லாவிட்டால் வேறு யாருக்கு இருக்கிறது? எந்த விதத்திலாவது, எப்படியாவது, சக்கரவர்த்தியிடம் நேரில் ஓலையைக் கொடுத்துவிட வேண்டும் என்று நான் இட்ட கட்டளையை அவன் நிறைவேற்றி விட்டான். அதனால் பழுவேட்டரையர்கள் கோபங்கொண்டிருக்கிறார்கள். இதில் வந்தியத்தேவனின் தவறு என்ன?'' என்று ஆதித்த கரிகாலன் கேட்டான்.

''தாங்கள் சொல்லி அனுப்பிய காரியத்தோடு அவன் நின்றிருக்கமாட்டான். வேறு வேண்டாத காரியங்களிலும் தலையிட்டிருப்பான்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

''நீ சற்றுச் சும்மாயிரு! தாத்தா! ஏன் இப்படி மௌனமாயிருக்கிறீர்கள்? தங்களுடைய கருத்து என்ன? ஒரு பெரும் படை திரட்டிக் கொண்டு சென்று தஞ்சாவூரிலிருந்து சக்கரவர்த்தியை மீட்டுக் காஞ்சிக்கு அழைத்து வந்துவிட்டால் என்ன? எத்தனை நாள் சக்கரவர்த்தியைப் பழுவேட்டரையர்கள் சிறையில் வைத்திருப்பது போலவைத்திருப்பதை நாம் பார்த்துக் கொண்டிருப்பது? எத்தனை நாள் பழுவேட்டரையர்களுக்குப் பயந்து காலம் கழிப்பது?'' என்று பொங்கினான் ஆதித்த கரிகாலன்.

தம் வாழ்நாளில் அறுபத்தாறு போர்க்களங்களைக் கண்டு அனுபவம் பெற்றவரான திருக்கோவலூர் மலையமான் — மிலாடுடையார் — மறுமொழி சொல்லுவதற்காகத் தொண்டையைக் கனைத்துக் கொண்டார். இதற்குள் எதிரே கடல்அலைகள் தெரியவும் ''முதலில் இந்த ரதத்திலிருந்து இறங்குவோம், தம்பி! வழக்கமான இடத்தில் போய் உட்கார்ந்து பேசுவோம். எனக்கு வயது ஆகிவிட்டதல்லவா? ஓடுகிற ரதத்தில் பேசுவது எளிதாக இல்லை'' என்றார்.

(தொடரும்)

# விஸ்ட்ரம்

ஒரு டயபடிக் உணவு







நீரிழிவுக்காரர்களுக்கென்றே பிரத்யோகமாக வடிவமைக்கப்பட்டது.

சோர்வை நீக்கி, சக்தியை கொடுத்து தெம்பை ஊட்டுகின்றது

கொழுப்புச் சத்து சிறிதும் இல்லாதது

முழுவதும் தானியம், பருப்பு வகைகளால் ஆனது

செயற்கை வண்ணமோ, மணமோ, ருசியோ சேர்க்கப்படாதது இயற்கை தந்த பாதுகாப்புடன் அளிக்கப்படுகிறது

ஸ்பென்ஸர்ஸ், சிந்தாமணி, நீல்கிரீஸ் மற்றும் எல்லா மருந்துக் கடைகளிலும், டிபார்ட்மெண்டல் கடைகளிலும் கிடைக்கும்.

# ஆயிரம் இரவுகள்

**கதை சொல்லுவதில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பாணி உ.ண்டு. அண்மையில் மறைந்த கே. ஏ. அப்பாஸ் பாணியே தனி. அவருடைய ஒவ்வொரு கதையிலும் மனித நேயம் மேலோங்கி' நிற்கும். 1956—ல் எழுதப்பட்ட இந்தக் கதையும் அப்படிப்பட்ட ஒன்றுதான்.....**

பத்திரிகைகளை விரித்துப் படித்துக் கொண்டிருந்தேன். 'முதல் இரவு கடுமையானதாகத்தான் இருக்கும்' என வயது முதிர்ந்த அந்தப் பிச்சைக்காரன் கூறியிருந்தான்'.

முதல் இரவு. ஒடுங்கிய அந்தச் சந்தில் நான்' மிகவும் ஜாக்கிரதையாகச் சென்றேன். தவறான ஒரு 'கார்'யத்தைச் செய்கிறோம் என என் மனசாட்சி உறுத்தியது. எல்லையும் மீறிய 'வெட்கம்' என்னை ஆட்கொண்டது.

பம்பாய்நகரத்துக்குவந்துஒருமாதமாகிவிட்டது. முப்பதே நாட்கள்தான். ஆனால் என்னுள் எத்தனையோ ஆண்டுகள் கடந்து விட்டது போன்ற ஓர் உணர்வு. வயதாகிவிட்டது போன்ற ஓர் எண்ணம். உத்திரப்பிரதேசத்திலுள்ள ஹாத்ராஸ் என்னும் ஊரிலிருந்து உட்காரக் கூட இடமில்லாத நிலையில் உள்ளமூன்றாம்வகுப்புவண்டியில்நான்பம்பாய்க்கு வந்தேன். ஓசிப் பயணம் அல்ல. டிக்கெட் எடுத்துக் கொண்டுதான் ரயிலில் பயணம் செய்தேன். என் பையில் இருபது ரூபாய்களுக்கு மேல் இருந்தது. உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்த சர்டிபிகேட்டையும் வைத்திருந்தேன். இளமைப் பருவத்து இன்பக் கனவுகளில் மிதந்து கொண்டிருந்த நான் வாழ்க்கையில் வெற்றி காணுவோம் என்ற நம்பிக்கையுடன்தான் பம்பாய்க்கு வந்தேன். எனக்கு ஒரு வேலையும், சொந்தமாகத் தங்குமிடமும் கிடைக்கும் வரை தன்னுடன் வைத்துக்கொள்ளுமாறு பம்பாய்வாசி ஒருவருக்கு அவரது நண்பரிடமிருந்து கடி



தம் வாங்கி வந்தேன். அவர் ஒரு பஞ்சாலையில் பணியாற்றுகிறவர். டரேல் பகுதியில் ஒரு கட்டடத்தின் ஐந்தாவது மாடியில் உள்ள ஓர் அறையில் அவர் குடியிருந்தார். அந்த அறைதான் அந்தக் குடும்பத்திற்குச் சமையலறை, படுக்கை அறை, குளிக்கும் அறை எல்லாம். குழந்தை குட்டிகளுடன் குடித்தனம் செய்தார் எனது நண்பரின் நண்பர். கட்டடத்தில் வரிசை வரிசையாகக் கட்டப்பட்டுள்ள அறைகளுக்கு முன்னால் ஒரு 'வராந்தா' உண்டு. அந்த வராந்தாவில்தான் இரவில் நான் சயனிப்பேன். ஓரத்திலுள்ள கக்கூஸின் மணமும் பாக்டரியிலிருந்து கிளம்பி வரும் புகையின் மணமும் சேர்ந்து ஒரு புதிய சகிக்க முடியாத மணம் வீசும்.

பகல் முழுவதும், நான் தொழிற்சாலைகள், அலுவலகங்கள், ஸ்டுடியோக்கள், வேலை தேடித் தரும் நிலையம் முதலியவற்றிற்கு ஏறி இறங்கினேன். படுக்கைக்குச் செல்லும்போது அலுத்துக் களைத்துப் போவேன். தூக்கமும் உடனே வந்துவிடும். எனவே அந்த வராந்தாவில் வீசும் துர்நாற்றம் என் தூக்கத்திற்கு இடையூறாக இருக்கவில்லை. அங்கு படுத்துத் தூங்க முடியாது தான். ஆனால் படுப்பதற்கென்று ஓர் இடம் கிடைத்ததல்லவா! இதுதான் விஷயம்.

ஒருநாள் இரவு. என்னைப் பராரியாக்கிய இரவு. அந்த இரவுதான் என்னைப் பிளாட்பாரத்து ராஜாவாக்கியது. அந்த இரவில் மருந்துக்குக்கூட காற்றில்லை. வெப்பம் மிகுந்த இரவு. வராந்தாவில் படுத்திருந்த எனக்கு வீட்டினுள்ளே இடம் கொடுத்த தம்பதிகள் பேசும் குரல் கேட்டது.

"ஐயோ! அப்பா! வெப்பம் தாங்க முடியவில்லையே' என்றாள் மனைவி. 'கதவையாவது திறந்தால் கொஞ்சம் காற்று வரும்.'

'கதவை எப்படியம்மா திறப்பது? அவர் அங்கேபடுத்திருக்கிறாரே' என்றான் கணவன்.

இதற்குப் பின்னும் நான் அங்கிருப்பது சரியல்ல என்ற முடிவுக்கு வந்தேன். மறுநாள் 'வேறிடத்தில் படுத்துக் கொள்ள ஏற்பாடு செய்து கொள்கிறேன்' என்று அவர்களிடம் கூறிவிட்டேன்.

வேண்டா வெறுப்பாக, 'சௌகரியமாக இருக்குமல்லவா' எனக் கேட்டார்.

'பெரிய இடம். மிகவும் வசதியுள்ள இடம்' என நான் பொய் சொன்னேன்.

## முதல் இரவு

பம்பாய் நகரத்தின் பிளாட்பாரத்தில் படுத்திருந்த பிச்சைக்காரன் 'முதல் இரவு கடுமையாகத்தான் இருக்கும். பழகி விட்டால் சரியாகப் போய்விடும்' என்றான்.

அன்று இரவு நான் கொஞ்ச நேரமே தூங்கியிருப்பேன். பிளாட்பாரத்தில் கிடந்த சின்னஞ்சிறு கற்கள் எனது சதையையும், எலும்பையும் கூடப் பதம் பார்த்தன. மூடப் படாத சாக்கடையிலிருந்து கிளம்பி வரும் துர்நாற்றம் மூக்கைப் பிய்த்தது. சாக்கடையில் புரண்டெழுந்த ஒரு நாய் புதுமுகம் என்ற முறையில் என் முகத்தருகே வந்து மோப்பம் பிடித்தது. சிறிது நேரத்திற்கு முன் தான் என் கால் விரல்களை ருசி பார்த்துச் சென்ற எலியைத் தேடி வந்த பூனை என் காலை நக்கியது. உடனே காலணியை அணிந்து கொள்ள நினைத்து எழுந்து உட்கார்ந்தேன். காலணிகளைக் காணவில்லை. எந்தப் புண்ணியவானோ இருடிக் கொண்டான். இல்லை, எடுத்துக் கொண்டான்.

வானத்தைப் பார்த்தேன். சந்திர மண்டலத்திற்கும் அப்பாலுள்ள நட்சத்திரக் கூட்டம் மினுக்மினுக்கென ஒளி வீசின. பம்பாய் நகரத்தின் வானளாவிய மாடமாளிகைகளைப் பார்த்தேன். ஒரு கணம்! என்னைப் பயம் ஆட்கொண்டது. எந்த நிமிடத்திலும் அந்த மாடமாளிகைகள் தகர்ந்து தரை மட்டமாகிவிடும் என்ற உணர்வு எனக்குள் தோன்றியது.

மாநகராட்சிக்குச் சொந்தமான குப்பை வண்டியொன்று நின்றது. இரவில் நெடு நேரம் வரை வேலை செய்யும் குடும்பப் பெண்கள் வீடுகளிலிருந்து அன்றைய எச்சில் உணவையும், காய்கறித் தோல்களையும் வீசினார்கள். அவற்றில் சில என் மீதே விழுந்தன. மறுகணம் ரஸ்தாவின் எங்கோ நின்று கொண்டிருந்த நாய்கள் ஓடோடி வந்தன. குரைத்துக் கொண்டே வந்த அவை போட்டி போட்டுக் கொண்டு உணவைப் பகிர்ந்தன. பிரதான ரஸ்தாவில் ஒரு கார் பறந்து சென்றது. காருக்குள் இருந்த பெண்மணிகள் உரக்கச் சிரித்தனர். அவர்கள் வேறு உலகத்தை சேர்ந்தவர்கள் போல் தோன்றியது. பக்கத்திலுள்ள ஒரு பாலத்தின் வழியாக ஒரு ரெயில் சென்றது. ரயில் சக்கரங்களின் சத்தம் ஒலித்தது. எதிரொலித்து இடி முழக்கமென கேட்டது.

இவ்வளவையும் சகித்துக் கொண்டு என தருகில் படுத்திருந்த பிச்சைக்காரன் குறட்டை விட்டுத் தூங்கினான். அவனைப் பார்த்து நான் பொறாமைப்பட்டேன்.

## 57—வது இரவு

பாதையோர வாசிகள் பட்டணத்தில் நானும் இப்பொழுது ஒரு சிப்பாய்.

முதல் இரவு அனுபவத்திற்குப் பின் சில நாட்கள் பாதையோரத்தில் படுத்து உறங்க நான் சிரமப்பட்டேன். சௌபாத்தியிலுள்ள தொங்கும் தோட்டத்தின் பெஞ்சில் படுக்க முயன்றேன். கடற்காற்றில் சுகமாகத் தூங்கலாம் என்ற எண்ணத்துடன் 'மரைன் டிரைவ்' பகுதியில் ஒரு சினிமா நடிகையின் வீட்டு முன்னால் படுத்து உறங்க முயன்றேன். ஆனால் நடக்கவில்லை. இங்கெல்லாம் இரவில் ரோந்து சுற்றும் போலீசார்கள் விரட்டியடித்தார்கள். எனவேமீண்டும்பாதையோரத்திற்கே வந்தேன்.

**கே. ஏ. அப்பாஸ்**

## அருள்வாக்கு

இஷ்ட தெய்வம் என்று ஒன்று இருக்கலாம். ஆனால் அதுதான் எல்லாமாயிருக்கிறது என்பதால் அதுவேதான் மற்ற தெய்வங்களுமாகியிருக்கிறது என்ற எண்ணம் இருக்க வேண்டும். ஒன்றைப் பிடித்துக் கொண்டதற்காக இன்னொன்றை நிந்திக்கக் கூடாது. விஷ்ணுதான் கடவுள், சிவன் ஒரு ஜீவன் — அல்லது சிவன் தான் கடவுள், விஷ்ணு ஒரு ஜீவன் — என்றால்கூட ஒரு மூர்த்தியிடம் துவேஷம் பாராட்ட இடமில்லை. ஒருத்தர் ஸ்வாமி, இன்னொருத்தர் பக்தர் என்றாலும் பக்தருக்குரிய மரியாதையைச் செய்யத்தானே வேண்டும்? சிவன் விஷ்ணுவுக்கு பக்தன்; அல்லது சிவனுக்கு விஷ்ணு பக்தன் என்றே சொல்கிறார்களே தவிர இருவருமே பரஸ்பரம் துவேஷித்துக் கொள்ளும் விரோதிகள் என்று யாரும் சொல்ல

இறுதியில் ஓர் அருமையான இடத்தைக் கண்டு பிடித்தேன். பெரோஸ்ஷா மேத்தா ரோட்டில் ஒரு பாங்கியின் முன்னால் படுக்க ஆரம்பித்தேன். அந்த இடம் ஒரு பாதுகாப்பான இடம் என என் உள்ளுணர்வில் தோன்றியது. அந்தப் பாங்கே என்னுடைய பாங்க் என்ற விசித்திரமான உணர்வுடன் என்னுடைய உடமைகளைப் பாதுகாப்பதற்காக அங்கு படுத்தேன்.

நான் எப்பொழுதும் அந்த பாங்கை நோக்கியே முகத்தை வைத்துத் தூங்குவேன். பாங்கியின் பிரும்மாண்டமான கண்ணாடிச் சுவர்களில் தங்க நிறத்தில் பாங்கின் பெயர் பொறிக்கப்பட்டிருந்தது. பாங்கியின் மூலதனம் **50,00,00,000** ரூபாய் எனக் கொட்டை எழுத்துக்கள் டாலடித்தன. இப்பொழுது எனக்கு நன்றாகத் தூக்கம் வருகிறது. தூங்குவதற்கு முன்னால் பாங்கில் கொட்டை எழுத்துக்களில் தோன்றும் **50,00,00,000** என் கண்களில் பளிச்சிடுகின்றன 5 கோடியா அல்லது 50 கோடியா? எனக்கு கணக்கு நன்றாக வராது. பணத்தை நினைத்துக் கொண்டே நன்றாகத் தூங்கி விடுவேன். நேற்று இரவு லட்சக்கணக்கான ரூபாய் எனக்குக் கிடைப்பதாகக் கனவு கண்டேன். அவற்றைப் பம்பாயிலிருந்து உத்திரப் பிரதேசத்திலுள்ள எனது சிறிய ஊரான ஹத்ராஸுக்கு அனுப்புவதுபோல் கனவு கண்டேன். ஆம். எனது பெற்றோர்களும் தன்னுடைய மகன் பம்பாயிலிருந்து ஏராளமான பணத்துடன் திரும்புவான் என நம்பிக்கையுடனிருக்கின்றனர்.

## 127—வது இரவு

நான் அருமையாகத் தூங்கிக் கொண்டிருந்த அந்த இடத்தையும் இழக்க நேரிட்டது. கொள்ளைக்காரர்கள் அந்த பாங்கை முற்றுகையிட்டுக் கொள்ளையடித்தனர். அன்று இரவு நடந்த நிகழ்ச்சிகளை நினைத்தாலே புல்லரிக்கிறது. அந்த பாங்கில் தானாக இயங்கும் மணிகள் உண்டு. அன்று இரவு அவை திடீரென ஓசையெழுப்பின. மணியோசை எங்களை எல்லாம் ஆழ்ந்த தூக்கத்திலிருந்து எழுப்பியது. கண் விழித்துப் பார்த்தேன். கொள்ளைக்காரர்கள் ஓடுவதற்கான ஆயத்தம் செய்தார்கள். எனக்கு அவர்கள் மீது கடுமையான கோபம் ஏற்பட்டது. என்னுடைய 'பாங்க்' அல்லவா கொள்ளையடிக்கப்பட்டது.

ஆத்திரமடைந்த நான் கொள்ளைக்காரர்களில் ஒருவனின் ட்ரவுசரைப் பிடித்திழுத்தேன். அவன் கைகள் இரண்டிலும் கத்தை கத்தையாக கரன்சி நோட்டுக்கள் இருந்ததால் என்னை உதற முடியவில்லை. ஓடிக் கொண்டே என்னையும் சமாளிக்க நினைத்தான். ஆனால் போலீஸ்காரர்களின் விசில் சத்தம் கேட்கவே நிதானம் இழந்த அவன் தன் காலால் என் மீது ஓங்கி ஓர் உதை கொடுத்தான். நான் கீழே விழுந்தேன். அவன் ஓடிவிட்டான். அவனது ட்ரவுசர் துணியின் ஒரு பகுதி மட்டும் என் கையிலேயே இருந்தது. ஒரு நல்ல குடிமகன் என்ற முறையில் கொள்ளைக்காரன் அணிந்திருந்த ஆடையின் ஒரு பகுதியை நான் போலீஸ்காரர்களிடம் தந்தேன். அதைக் கொண்டு கொள்ளைக்காரர்கள் பற்றிப் போலீஸார் துப்பறியலாம் அல்லவா? ஆனால் நான் ஒரு பிளாட்பாரம் வாசி என்று தெரிந்ததும் போலீஸார் என்னையே கைது செய்துவிட்டார்கள். அவர்களிடமிருந்து மீண்டது பெரும்பாடாகிவிட்டது. இனியும் பாங்குகளின் முன்னால் படுப்பது சரியல்ல என்ற முடிவுக்கு வந்தேன்.

எனவே என்னுடைய சயனத்தை தாஜ் மஹால் ஹோட்டலுக்கு மாற்றினேன். தாஜ் மஹால் ஹோட்டல் என்றதும் அங்கு ஓர் அறை எடுத்துவிட்டேன் என நினைத்து விடாதீர்கள். என்னைப் போன்று பதிவு செய்யாத விருந்தினர்களுக்காக தாஜ்மஹால் ஹோட்டலில் ஓர் அழகான வெளி வராந்தாவைக் கட்டியிருக்கிறார்கள். அதில் ஒரு நல்ல இடத்தை தேர்ந்தெடுத்தேன். ஹோட்டலில் தயாராகும் உணவின் வாசனை 'ஜம்'மென்று வீசும். அத்தோடு இரவில் அகாலத்தில் ஹோட்டலில் தங்க வருபவர்களையும் ஒரு கண் பார்த்துக் கொள்ளலாம். அழகிய கருப்பு நிற ஆடை அணிந்த அந்நிய நாட்டுக் கனவான்கள், செக்கச் சிவந்த உடம்புக்கு மெருகேற்றும் வகையில் பட்டாடை அணிந்து வரும் பாவையர், கதராடை உடுத்தும் தலைவர்கள், அவர்களது நாகரிக மனைவியர், மெருகு கலையாத மோட்டார் கார்களில் ஜ்வலிக்கும் நகையணிந்து வரும் ராஜா ராணிகள், இத்தகைய இருக்கூட்டத்தினர் கொடுத்து வைத்தவர்கள். 'டாட்டா' பை பை டார்லிங்' என்ற குரல்கள் ஒலிக்க வந்து போவது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. பணம், நாகரிகம், அழகு இவைகளின் அற்புதக் காட்சியை அங்கே காணலாம். ஒரு சினிமாக் காட்சியைவிட இவை அற்புதமாக இருந்தன. சினிமாவில் வரும் யுவதிகளை படத்தில்தானே பார்க்கிறோம். இங்கே அந்த

வில்லையே. அப்படியிருக்க அவர்களில் ஒருவரை நாம் ஏன் துவேஷிக்க வேண்டும்?

ஒரு புராணத்தில் சிவன் விஷ்ணுவை நமஸ்கரிக்கிறார்; இன்னொரு புராணத்தில் விஷ்ணு சிவனை நமஸ்கரிக்கிறார் என்பதால், இவர்கள் சின்னவர்களாகிவிடவில்லை. சிவனை நமஸ்காரம் பண்ணு என்று சிவனே சொல்லாமல் விஷ்ணு அதை நமக்குக் காரியத்தில் உபதேசிக்கிறார். இப்படியே நமக்கு விஷ்ணு பக்தி உண்டாக்கவே சிவன் விஷ்ணுவைப் பூஜிக்கிறார். ஜனங்களின் விதவிதமான ருசிக்குத் தகுந்த மாதிரி ஒரே பரமாத்மா வேறு வேறு ரூபத்தில் வருகிறார். அவரவருக்கும் தங்கள் இஷ்டமூர்த்தியிடம் திடபக்தி உண்டாவதற்காக, தாமே இன்னொரு மூர்த்தியால் இந்த மூர்த்தியை நமஸ்காரம் பண்ணுகிறார். பகவானைப் பூஜிக்கிற மாதிரியே பாகவதர்களையும் பூஜிக்க வேண்டும் என்று வைஷ்ணவர்கள் சொல்கிறார்கள்.



சிவனைப் போலவே சிவனடியாரையும் வழிபட வேண்டும் என்று சைவர்களும் சொல்கிறார்கள். எனவே இவர்களில் ஒருத்தர் இன்னொருத்தரைப் பூஜை செய்கிறார் என்னும் போது கூட, பூஜை செய்பவரை நாம் நமஸ்கரிக்கத்தான் வேண்டும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

நாரீமணிகளை அவர்களது லீலா விநோதங்களை நேரில் பார்க்கும்போது எப்படியிருக்கும்! ஆம்! திரையழகைவிட இங்கு நேரில் பார்க்கும் காட்சிகள் சிறப்பாகவேயிருந்தன. அங்கு வரும் எழிலரசிகளின் ஆடைகளிலே தடவப்பட்டிருந்த வாசனைத்திரவியங்களின் நறுமணத்தை நான் நுகர்ந்தேன். ஒரு சமயம் ஒரு பேரழகி என்னைக் கடந்து சென்றாள். அவளது சேலையின் ஒரு பகுதி என் முகத்தில் பட்டது. அவளையே பார்த்து மெய்மறந்திருந்த எனக்குச் சேலைப் பகுதி முகத்தில் பட்டது இடையூறாகத்தான் இருந்தது. ஆனாலும் இனிமையாக இருந்தது. கொடுத்து வைக்க வேண்டுமே! மற்றுமொரு நாள் இரவு. நடு இரவில் காதலர்கள் ஜோடி ஜோடியாக வந்தார்கள்.

மதுபானம் அருந்தும் அறைக்குள் கொஞ்ச நேரத்தைக் கழித்துவிட்டு வெளியே வந்தனர். வராந்தாவில் படுத்துக் கிடந்த எங்களை அவர்கள் உயிரற்ற சடலங்கள் என எண்ணியிருப்பார்கள் போலும். அல்லது தூங்கிவிட்டார்கள் என்று நினைத்திருக்கலாம். அல்லது அங்கு படுத்திருக்கிறவர்களுக்கு ஆங்கிலம் தெரியாதென்று நினைத்திருக்கலாம். நான் பத்தாவது வரை படித்தவன். எனது நண்பன் அங்கு படித்து வரும் ராஜு ஒரு பட்டதாரி என்பதை அவர்கள் அறிந்திருக்க நியாயமில்லை அல்லவா? அதனால்தான் அவர்கள் ஜோராகப் பேசினார்கள். 'கண்ணே, வா?' 'எங்கே இந்நடு இரவில் போவது?' 'ஜுஹுவுக்குப் போகலாம். அங்கு போய் கொஞ்ச நேரம்.... அல்லது நீ விரும்பினால் இரவு முழுவதும் நிலவு ஒளியில் நாம் இருவரும் ஜாலியாக இருக்கலாம்.'

மறுகணம் ஆனந்தக் கூத்தாடிக் கொண்டு காரில் ஏறி அவர்கள் கடற்கரையை நோக்கிச் சென்றார்கள். எனது கற்பனை கடிவாளமற்ற குதிரையைப் போல் பறந்தது. நிலவொளியிலே ஜுஹு பீச் கடற்கரையில் வீசும் இனிமையான தென்றல் கடற்கரை மணலில் புரளுவது போன்ற எண்ணம். எல்லாம் சேர்ந்து இளைஞனான எனக்கு மனமயக்கத்தைத் தந்தன.

## 276—வது இரவு

**தா**ஜ் ஹோட்டலில் நான் தங்கியிருந்த அறையை, இல்லை வராந்தாவைக் காலி செய்து எத்தனையோ நாட்களாகிவிட்டன. காலி செய்யவில்லை. காலி செய்யப்பட்டேன். தாஜ் ஹோட்டலில் தங்க வரும் சிலருக்கு நாங்கள் வராந்தாவில் 'சனியன்'களாகத் தென்பட்டோம். எனவே புகார் செய்தனர். உடனே நாங்கள் வெளியேற்றப்பட்டோம்.

அதிலிருந்து நான் பருவ காலத்திற்கேற்ப எனது படுக்குமிடத்தை பல இடங்களுக்கு மாற்றிக் கொண்டிருந்தேன். வெயில் காலத்தில் அப்பல்லோ பந்தரில் தூங்கினேன். மழை காலத்தில் மகாத்மா காந்தி ரஸ்தாவிலுள்ள ஒரு பெரிய கடையின் முன்னால் மழை நீர் மேலே விழாதபடி பாதுகாக்கப்பட்டிருந்த இடத்தில் படுத்து உறங்கினேன். கடைக்கு எதிரே பிரகாசமான விளக்குகளின் ஜோதியில் நீச்சலழகிகள், தங்கள் தயாரிப்பான பெண்கள் அணியும் பாடிகளை விளம்பரப்படுத்த பாடிகள் மட்டும் அணிந்த பெண்மணிகளின் உருவங்கள், எடுப்பாக அமைக்கப்பட்டிருந்தன. மறுபடியும் நான் நிம்மதியாகத் தூங்க முடியாத நிலை.

இப்பொழுது நான் வேலையில்லாத ஒருவனல்ல. எப்படியோ மாதம் ரூ 45 சம்பளத்தில் ஒரு வேலை கிடைத்துவிட்டது. ஏற்றுமதி இறக்குமதி செய்யும் ஓர் அலுவலகத்தில் நான் பியூனாக வேலை பார்த்தேன். அந்த அலுவலகத்தில் ஏற்றுமதியும் நடக்கவில்லை. இறக்குமதியும் நடக்கவில்லை. எல்லா வியாபாரமும் கடிதங்கள், தந்திகள், தொலைபேசிகள் அல்லது பின்னறையில் ரகசியப் பேச்சுக்கள் மூலமே நடந்தன. அங்கு நடந்த

வியாபாரம் கள்ள மார்க்கெட் வியாபாரமோ என நான் சந்தேகித்தேன். எப்படியிருந்தால் எனக்கென்ன? எனக்கு மாதம் ரூ 45 கிடைக்கிறது.

எனக்கு வேலை கிடைத்துவிட்டது. ஆனால் தங்குவதற்கு ஓர் இடம் கிடைக்கவில்லை. ஒரு சின்னஞ்சிறு இடத்திற்குக் குறைந்தபட்சம் ரூ 200 'பகிரி' (இனாம்) தர வேண்டியுள்ளது. நகரத்து வெளிப்புறத்தில் தென்இந்தியாவைச் சேர்ந்த வீடு கட்டும் தொழிலாளர்கள் வாசம் செய்யும் குடிசைகள் ஒன்றில் நானும் தங்கலாம். ஆனால் அவை வெகு தூரத்தில் உள்ளன. மேலும் நகர வாழ்க்கை, சுறுசுறுப்பு நிறைந்த, ஒளிவிளக்குகள் நிறைந்த, போக்குவரத்து நிறைந்த நகர வாழ்க்கையை நான் விரும்பினேன். நகரத்தில் வேறு சிலருடன் சேர்ந்து மாதம் ரூ 10 வாடகை கொடுத்து, ஒரு பெரிய வீட்டின் ஓர் அறையில் தங்கலாம். அதையும் முயற்சி செய்தேன். ஆனால் ஓர் இரவு கூட என்னால் தங்க முடியவில்லை. ஜன்னல் கூட இல்லாத அந்த அறையில் ஆறு பேர்களுடன் என்னால் படுத்து உறங்க முடியவில்லை. எனவே பரந்த வானத்தின் கீழே மீண்டும் பாதையோரத்திற்கு வந்துவிட்டேன்.

இப்பொழுது நான் லாமிங்டன் ரஸ்தாவில் தங்குகிறேன். சினிமாவுக்குச் செல்ல பணம் இல்லாத நாட்களிலும் சாரி சாரியாக சினிமாப் பார்க்கச் செல்லும் கூட்டத்தினரை இலவசமாகப் பார்க்க முடியும். தங்களது அழகான மெருகு கலையாத மோட்டார்களில் போகும் சினிமா நட்சத்திரங்களைக் கூட என்னால் பார்க்க முடியும். ஒருநாள் திலீப் குமாரைப் பார்த்தேன். திலீப் குமாரென்று உரக்கக் கத்தினேன். கூட்டத்தில் என்னுடைய குரலை அவர் கேட்கவில்லை. அவரது கார் வேகமாகச் சென்றது. பின் தொடர்ந்து திலீப் குமாரின் வீட்டைக் கண்டு பிடித்துவிட்டேன். ஆனால் வீட்டுக்குள் நுழைய தைரியமில்லை. அவரது வீடு போலீஸ் ஸ்டேஷனுக்கு அருகாமையில் இருந்தது.

## 537—வது இரவு

இப்பொழுது இரவு நேரங்களில் குளிர் வாட்டியது. எனவே மறுபடியும் எனது படுக்கையை திலகர் பாலத்திற்குக் கீழே மாற்றிக் கொண்டேன். ஒரு பெரிய 'கான்வஸ்' போஸ்டர் எனக்குக் கிடைத்தது. அதை வைத்து குளிரிலிருந்து என்னைப் பாதுகாத்துக்கொண்டேன். அந்தப் போஸ்டரில் ஓர் அழகான நடிகையின் படம் வரையப்பட்டிருந்தது. சாஞ்சல் பாலாவின் படம்தான் அது. 'பெயிண்ட்' பூசியிருந்த பாகத்தை மேலே வைத்து என்னைப் போர்த்திக் கொண்டு படுத்து வந்தேன். ஆனால் அதற்கும் இடையூறு வந்துவிட்டது. குறுகிய மனம் படைத்த சில பொறுக்கிகள் படத்தை ரசிக்க ஆரம்பித்துவிட்டனர். ஏதேதோ பேசினார்கள். சிலர் படத்தையில்லை, படத்திலுள்ள சாஞ்சல் பாலாவின் அழகிய அதரங்களை முத்தமிடவே ஆரம்பித்துவிட்டனர். இனி என்ன செய்வது. சாஞ்சல் பாலாவின் முகத்தை என் முகத்தோடு வைத்துக் கொண்டு கான்வஸ் துணியை மாற்றிப் போட்டுக் கொண்டு தூங்க ஆரம்பித்தேன்.

## 840—வது இரவு

வசந்த காலம் துவங்கியது. பாதையோர வாசிகளுக்கும் வசந்தத்தின் இன்பம் கிடைத்தது. இலைகளே இல்லாத 'குல்மோகர்' மரம் செக்கச் சிவந்த மலர்களைக் கொண்ட மரமாயிற்று. அந்த மலர்களைப் பார்த்ததும் நான் ஒரு தத்துவ ஞானி போன்று சிந்திக்கிறேன். "எனது வாழ்க்கையும் இலைகளற்ற மரம் போல்தான் இருக்கின்றது. திடீரென எனது வாழ்விலும் வசந்தம் ஏற்படாதா? வாழ்வு மலராதா?" இத்தகைய எண்ணங்கள். சிந்தனையை விடுகிறேன். சினிமாவில் தோன்றும் பிச்சைக்கார வேதாந்தியல்ல நான்.

ஆனால் இங்கே 'வசந்தம்' உண்டு என்பதை நானறிவேன். செந்நிறப் பூக்களைப் பார்த்து ரசிக்க விரும்புகிறேன். அதே சமயம் 'சம்பா'வையும் பார்க்க விரும்புகிறேன். பாதையோரவாசிகளில் அவள் பேரழகி! இலைகளில்லாத மரத்தில் தோன்றும் அழகான செந்நிறப் பூக்களைப் போல் அவள் ஓர் அழகி.

அவள் எங்கிருந்து வந்தாள் என்பதை நானறியேன். ஆனால் அவள் அழகின் இருப்பிடம் என்பதை நானறிவேன். அவளது சிவந்த மேனி, நீலநிறக் கண்கள், கருமையான கூந்தல், கால்களை நீட்டி உட்கார்ந்து கொண்டு அவள் தலை சீவி முடிப்பது, இவற்றையே நான் பார்த்துக் கொண்டிருந்தேன். நான் மட்டுமென்ன? எல்லோருமே பார்த்தார்கள், ரசித்தார்கள். ஆனால் அவள் என்னை மட்டுமே நோக்கினாள். குழாயடிக்கு நான் சென்றால் அவளும் வந்து விடுவாள். குழாயைத் திருகும் சில சமயங்களில் என் கை அவளது கைமேல் படும். கையை அவள் எடுக்க மாட்டாள். நமது ஸ்பரிச சுகத்தை அவள் விரும்புகிறாளோ? இவ்வாறு எண்ணினேன்.... ஒருவேளை அது கற்பனையாக இருக்கலாம்.

சம்பா ஒரு நல்ல பெண். பாதையோரத்தில் வருடக் கணக்கில் தங்கி வரும் நான் பலரை அறிவேன். அவர்கள் எல்லோரையும் விட 'சம்பா' நல்லவள்தான். அதில் சந்தேகமே கிடையாது. அவளது கண்களில் ஏதோ ஒரு கவலை தோய்ந்திருந்தது. பயமும் கலந்திருந்தது. சில சமயங்களில் வேடனின் அம்புக்கிரையான மான்களின் கண்களைப் போன்று சம்பாவின் கண்கள் தோற்றமளித்தன. ஆனால் வேறு யாருமில்லை — நான் மட்டுமே அவளைப் பார்க்கிறேன் என்று தெரிந்தால் அவளது அழகிய கண்கள் ஒளி வீசும். அவளை அறியாமலே புன்னகை பூப்பாள். அப்போது கடந்த காலத்தின் இன்பானுபவங்களை நினைத்து அவள் புன்னகை பூப்பது போன்றிருக்கும்.

அவள் யாரிடமும் பேசுவது கிடையாது.

எல்லோரும் அவளுடன் அளவளாவ — சிநேகம் கொள்ள விரும்பினர். அதற்கான முயற்சி செய்தனர். சிலர் கெட்ட நோக்கத்துடன் அவளுடன் பழக ஆசைப்பட்டனர். அவளுக்கு ஒரே ஒரு சிநேகிதன்தான் உண்டு. அந்த நண்பன் பட்டினியால் நொந்து போன ஒரு கால் இல்லாத நாய்தான். அந்த நாயை 'மோத்தி' என அவள் பிரியமாக அழைப்பாள். 'இவ்வளவு அழகான ஒரு பெண் அந்த அவலட்சணமான நாயின் மீது எவ்வாறுதான் அளவு கடந்த அன்பு வைத்திருக்கிறாளோ?' என எல்லோரும் ஆச்சரியப்பட்டனர். ஆனால் பாதையோரவாசிகள் எத்தனையோ விசித்திரமான சம்பவங்களைப் பார்க்கிறார்கள். விசித்திரமான நிகழ்ச்சிகளை அனுபவிக்கிறார்கள். அத்தகைய விசித்திரங்களில் இதுவும் ஒன்று.

பகல் நேரங்களில் சம்பா என்ன செய்கிறாள் என்பது யாருக்கும் தெரியாது. ஆனால் ஒவ்வொரு நாளும் நான் வேலையை விட்டுத் திரும்பும்போது என் வயிறு சரியாக இருக்காது. என்னவென்று விவரிக்க முடியாத ஒரு பயம் என்னை ஆட்கொள்ளும். இருப்பிடத்திற்கு வந்து அந்த நாயுடன் 'சம்பா' செல்லமாகப் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் என்னுள் இருக்கும் சிரமம் எல்லாம் எங்கோ பறந்து விடும். அந்த ஒரு கணம் என்னுள் தெம்பும் திராணியும் வந்துவிடும். அந்த ஒருகணம்தான் — சம்பாவைப் பார்த்ததும்தான் நான் வாழ்வதாக உணர்வேன்.

இரவில் நாங்கள் எல்லோரும் படுப்பதற்கு தயாராவோம். சிலர் பாய்களை விரிப்பார்கள். சிலர் பேப்பர்களை விரிப்பார்கள். சம்பாவுக்கு அருகில் படுக்கையை விரிப்பதற்கான முயற்சிகளை மேற்கொள்வார்கள். குறிப்பாக ஒரு பயில்வானைப் போன்ற உடம்பைக் கொண்ட 'ராகியா'வும், சதா வெற்றிலை போட்டுக் கொண்டு சினிமாப் பாடல்களைப் பாடிக் கொண்டிருக்கும் 'பான்சி'யும் சம்பாவை நெருங்க நினைப்பார்கள். ஆனால் 'சம்பா' இவர்களுக்கெல்லாம் சரியான பதில் கொடுக்க தனதருகில் மோத்தியை வைத்திருந்தாள். யாராவது சம்பாவை நெருங்க நினைக்கிறார்கள் என்று தெரிந்த மறுகணமே, 'மோத்தி' குரைக்க ஆரம்பித்துவிடும். நேற்று இரவு தண்ணீர் குழாய்க்குப் போவதுபோல் பாசாங்கு செய்து சம்பாவின் அருகே வர நினைத்த ராகியாவின் காலை மோத்தி கடித்தே விட்டது. நான் அந்த நாயையும் நேசித்தேன். சம்பாவைக் காதலிக்கிறேன் அல்லவா?







## 907—வது இரவு

இன்று இரவு நான் மகிழ்ச்சிக் கடலில் நீந்தினேன். எனக்குத் தூக்கமே வரவில்லை.

முதல் முதலாக 'சம்பா' இன்று இரவுதான் என்னிடம் பேசினாள்.

இரவு எனது பாதையோரத்துக்கு வந்ததும் அங்கு யாருமில்லாதிருப்பதைப் பார்த்து ஆச்சரியப்பட்டேன். பிறகுதான் அன்று தீபாவளி தினம் என்பதை உணர்ந்தேன். எனது சகாக்கள் — பாதையோரவாசிகள் தீபாவளித் திருவிழாவைக் கண்டுகளிக்க, அந்தக் கூட்டத்தில் பிக்பாக்கெட் அடிக்க, கோவில்களில் இலவசமாகப் பிரசாதங்கள் வாங்க இன்ன பிற காரியங்களுக்காகச் சென்றுவிட்டனர். ஆனால் 'சம்பா' மட்டும் வழக்கம் போல் அங்கிருந்தாள். தனது அன்பான நாயைத் தடவி, அதன் மேலுள்ள அழுக்கைத் துடைத்துக் கொண்டிருந்தாள். என் பக்கத்தில் அவள் கவனத்தைத் திருப்ப நினைத்தேன். அவளிடம் பேசுவதற்குத் துணிச்சலில்லை. உரத்தகுரலில் இருமினேன். பாயை எடுத்து உதறி எனது வருகையைத் தெரிவித்தேன்.

'ஏய்மோத்தி நீ தீப வெடிக்கைகளைப் பார்க்கச் செல்லவில்லையா?' என்றாள். மோத்தி நாய் தலையை ஆட்டியது. சம்பா கேட்டது நாயை அல்ல. என்னைத்தான் கேட்டாள். எனினும் அவளிடம் பேச எனக்குத் துணிச்சல் ஏற்படவில்லை.

"கூட்டத்தைக் கண்டு பயமா? தெருக்களில் ஏகப்பட்ட கூட்டம். கூட்டத்துக்குள் உன்னால் போக முடியாது. இல்லையா?" என மறுபடியும் சம்பா கேட்டாள்.

இப்போது நான் பேசினேன். "நீ சொன்னது சரிதான் சம்பா. எனக்குக் கூட்டம் என்றால் பிடிக்காது."

நான் பேச வேண்டுமென்றுதான் சம்பா விரும்பினாள். எனினும் நான் பேச ஆரம்பித்ததும் அவள் திகைத்தாள்.

பிறகு எழுந்து நின்று மோத்தியையும், என்னையும் பார்த்து "வாருங்கள் போகலாம். ஒளி விளக்குகளைக் கண்டு களிக்கலாம். ஆனால் கூட்டத்தோடு சேரக் கூடாது. ஒதுங்கி நின்று பார்க்கலாம்" என்றாள்.

சம்பா, நான், மோத்தி மூவரும் ஊர்வலம் கிளம்பினோம். சம்பாவின் கண்கள் லட்சோப லட்சம் ஒளி விளக்குகள் தரும் ஒளியைப் போன்று பிரகாசித்தன. அவளது கண்களையே பார்த்துக் கொண்டு சென்றேன். எனினும் நாங்களிருவரும் பேசிக் கொள்ளவில்லை. இருப்பிடத்திற்குத் திரும்பி வரும் போது சம்பா ஒருகணம், கடையின் முன்னால் நின்றாள். கடையிலே பொருத்தியிருந்த கண்ணாடியில் சம்பாவின் முகத்தைப் பார்த்தேன். அந்தக் கடையில் கண்டோர் கண்ணைப் பறிக்கும் வகையில் பட்டாடைகளைப் பரப்பி வைத்திருந்தனர். கண்ணாடியில் சம்பாவின் கண்களில் அவளிடம் காணப்பட்ட ஆதங்கத்தைக் கண்டேன். அந்தப் பட்டாடைகளும், அந்த ஆடைகள் பிரதிநிதித்துவப்படுத்தும்

